KALKI 6.10.96 ரூ. 3.00

# கல்கி



"இது நம்ம ஆட்சியிலா நடந்தது?"

– நம்ப முடியாமல் கேட்ட கலைஞர்!



'சில்க்' மரணம்: சில சந்தேகங்கள்!

அழகிப் போட்டி அநாகரிகமானதா?

– ஒரு சூடான விவாதம்

# முத்துவேல் இண்டஸ்ட்ரீஸ்

(முத்துவேல் குரூப் நிறுவனங்கள்)

பொது மக்களின் வேண்டுகோளை ஏற்று பிக்சட் டெபாசிட் திட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படுகிறது.

## ஆண்டுக்கு

உங்கள் பிக்சட் டெபாசிட்டுக்கு கணக்கிடப்படும் வட்டி விகிதம்

# 24%

குறைந்தபட்ச முதலீட்டுத் தொகை ரூ. 10,000/-

உங்கள் குமுலேட்டிவ் டெபாசிட்டுகளுக்கு முதிர்வு தொகை அட்டவணைப்படி அளிக்கப்படும்

| மாதங்கள் | ரூ. 10,000-க்கு முதிர்வு தொகை |
|---|---|
| 12 | 12,600 |
| 24 | 15,876 |
| 36 | 20,004 |
| 48 | 25,205 |
| 60 | 31,756 |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ. 10,000/-

- முதல் டெபாசிட்டிற்குதான் குறைந்தபட்ச தொகை. அதே பெயரில் மீண்டும் டெபாசிட் செய்தால் ரூ. 1000/- அதற்கு மேலும் அனுப்பலாம்.
- மக்கள் சேவையில் 49 ஆண்டுகள்.
- 75% வரை கடன் பெறும் வசதி.
- முதிர்வு தேதிக்கு முன்பே முழுத்தொகை தேவையானாலும் பெற்றுக்கொள்ளலாம்.
- முதிர்வு தேதிக்கு 10 தினங்கள் முன்னதாக நினைவூட்டுக் கடிதம் அனுப்பப்படும்.
- நம்பிக்கையும் துரித சேவையும் எமது தாரக மந்திரங்கள்.

வியாபார வளர்ச்சிக்கு கைராசியான சேவல் மார்க் ஃபைல்களையே எப்போதும் உபயோகியுங்கள்.
**TAG FILE, CLIP FILE, LEVER FILE**
**COMPUTER FILE, FIBRE BOARD FILE, WRITING PAD.**




## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.
Ph: Off: (0451) 26850 & 27637.
Res : 26858 & 27011 Grams: COCKFILE

**உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி**

"ரிசர்வ் வங்கி சட்டம் அத்தியாயம் IIIC பிரிவு 45S-ன் கீழ் விதிக்கப்பட்டுள்ள வரம்புக்குட்பட்டு டெபாசிட்களைப் பெறுகிறோம்".

ADWAVE/M/5247

# 'சில்க்' மரணம்; சில சந்தேகங்கள்...



'அதுவொரு கசப்பான அனுபவம்... அதை எனது கெட்ட நேரம் என்று சொல்வதா? விதி என்றுதான் சொல்வதா என்று இப்போதும் எனக்குப் புரியவில்லை. படத் தயாரிப்பு பற்றி எதுவுமே தெரியாத நான், எப்படியோ தயாரிப்பில் இறங்கியதால், என் சம்பாத்தியத்தையெல்லாம் இழந்து விட்டேன்... (மௌனம்). பசி, தூக்கம் பார்க்காமல் ஒரு நாளைக்கு மூன்று ஷிப்ட், நான்கு ஷிப்ட் என்று நடித்துச் சம்பாதித்த அத்தனையையும் இழந்து விட்டேன்... (மௌனம்). அந்த இழப்பு என்னை விரக்தியின் உச்சிக்கே கொண்டு போய் விட்டது. அதன் காரணமாக, 'இனி இந்தச் சினிமாவே வேண்டாம்' என்று இரண்டாண்டு காலம் ஒதுங்கியே இருந்தேன்...''

– கடந்த ஆகஸ்ட் மாதம் வெளியான ஆண்டு மலரில் (4.8.96 இதழ்) நாம் வெளியிட்ட சில்க் ஸ்மிதாவின் பேட்டியின் ஒரு சிறு பகுதி தான் இது.

அந்தப் பேட்டிக்காக 18.7.96 அன்று அவரைச் சந்தித்தோம். மதியம் பன்னிரண்டு மணியிலிருந்து மாலை மூன்றரை மணி வரை ஏறத்தாழ மூன்றரை மணி நேரம் நம்மிடம் பேசினார். இன்னும் இரண்டொரு ஆண்டுகளில் தாம் காதலிப்பவரையே திருமணம் செய்து கொள்ளப் போவதாகக் கூறிய அவர், அந்தக் காதலர் யார் என்பதைத் தவிர, நாம் கேட்ட மற்ற கேள்விகளுக்கெல்லாம் தயக்கமின்றிப் பதில் சொன்னார். (அப்போது ராதாகிருஷ்ணன் வீட்டில்தான் இருந்தார் என்றாலும் எங்கள் பக்கம் வரவேயில்லை.)

தாம் சொந்தப் படம் எடுத்து நஷ்டப்பட்டது பற்றிப் பேசுகிற போது, அந்தக் கசப்பான நாட்கள் நினைவுக்கு வந்ததாலோ என்னவோ, பெரிய பெரிய மௌன இடைவெளிகளுக்குப் பிறகே பேசினார். தாம் விரக்தியின் உச்சிக்கே போனதாகச் சொன்னபோது மிகப் பெரிய மௌனம் சாதித்தார். "அப்போது நான் யாரையும் சந்திக்க கூட விரும்பியதில்லை. என்னை நானே தனிமைப்படுத்திக் கொண்டுதான் வாழ்ந்தேன்!" என்று சொன்னவர் கண்களில் அந்தச் சோகம் தெரிந்தது.

அப்படிப்பட்ட சூழ்நிலையில் கூட தற்கொலை செய்து கொள்ளாத சில்க்கா இப்போது தற்கொலை செய்து கொண்டார்?

பேட்டியில் மனிதரை மனிதர் நம்புவது பற்றிப் பேச்சு வந்தபோது, "நான் யாரையும் அவ்வளவு சுலபத்தில் நம்பி விடமாட்டேன். என்னிடம் வேலை செய்பவர்களுக்குக் கூட அவர்களின் சம்பளத்தை முழுவதுமாக அவர்களிடம் நான் கொடுப்பதில்லை. கைச் செலவுக்கு ஒரு சிறு பகுதியை மாத்திரம்

கொடுத்துவிட்டு, மீதியை அவர்களுடைய பெற்றோருக்கு அனுப்பி விடுவேன்!" என்றார்.

"ஏன் அப்படி?"

"நிறையப் பணம் கையில் கிடைக்கிற போது, வேண்டாத கெட்ட பழக்கங்களெல்லாம் வந்து சேர்ந்து விடும். அப்படியொரு வேலைக்காரப் பையன் குடித்து விட்டு வந்ததைப் பார்த்தேன். அதன் பிறகுதான் அப்படி."

"இதற்கெல்லாம் உங்களுக்கு நேரமிருக்கிறதா என்ன?"

"செய்துதானே ஆகவேண்டும். இத்தனைக்கும் எனக்கு எழுதக் கூட வராது."

"தெலுங்கில் கூடவா?"

"நான் எங்கே படித்தேன்? அதனால் தெலுங்கில் கூட எனக்கு எழுத வராது. அப்படியே எழுத ஆரம்பித்தாலும் ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டுத்தான் எழுத வேண்டும். அப்போதும் தப்புகள் வரும் என்பதால், அந்த மாதிரியான ரிஸ்க்கெல்லாம் எடுப்பதில்லை."

"பின் எப்படித்தான் கடிதம் எழுதுவீர்கள்?"

"விஷயத்தைச் சொல்லி பிறரைத்தான் எழுதச் சொல்லுவேன். என் பெற்றோருக்கே எழுத வேண்டுமானாலும் அப்படித்தான் எழுதச் சொல்லுவேன். பிறகு அவர்களையே படித்துக் காட்டச் சொல்லுவேன். அதன் பிறகு நானும் வாங்கிப் பார்ப்பேன்."

"படிக்க மாட்டீர்களா?"

"எழுதத்தான் வராதே தவிர படிப்பேன். தமிழ் கூட பெரிய பெரிய எழுத்துக்களில் அச்சாகியிருந்தால் எழுத்துக் கூட்டிப் படிப்பேனே... கடைசியில் கையெழுத்துப் போடுவேன்."

"தெலுங்கில்தானே."

"இல்லை. ஆங்கிலத்தில். தமிழ் ரசிகர்கள் ஆட்டோகிராப் கேட்கும் போது தமிழிலும் தெலுங்கு ரசிகர்கள் கேட்கும்போது தெலுங்கிலும் கையெழுத்துப் போட்டால் அவர்கள் சந்தோஷப்படுவார்களே என்று நான் பல முறை நினைப்பதுண்டு. ஆனாலும் கையெழுத்து என்று போட வருகிறபோது என்னையறியாமலேயே ஆங்கிலத்தில் போட்டு விடுவேன். காரணம், தமிழிலும் தெலுங்கிலும் கையெழுத்துக் கூட சரளமாகப் போட வருவதில்லை என்பதுதான்."

இப்படிச் சொன்ன சில்க் ஸ்மிதாவா தெலுங்கில் கடிதமெழுதி வைத்துவிட்டுத் தற்கொலை செய்து கொண்டிருப்பார்?

**வ**ரவேற்பறை ஷோகேஸில் விதவிதமான– விலையுயர்ந்த வெளிநாட்டு சாம்பின் மதுபாட்டில்கள் இருப்பதைச் சுட்டிக்காட்டி, "இதையெல்லாம் பார்க்கிறவர்கள், அவற்றின் அழகுக்காகத் தான் நீங்கள் வாங்கி வைத்திருப்பதாகச் சொல்வதை நம்ப மாட்டார்கள்..." என்று நாம் நாசூக்காகக் கேட்டபோது, "மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்று கவலைப்பட்டுக் கொண்டா நான் வாழ முடியும். என் வாழ்க்கையும் என் ரசனையும் முழுக்க முழுக்க என் சம்பந்தப்பட்டது; என் சந்தோஷம் சம்பந்தப்பட்டது...." என்றார்.

இப்படித் தமது வாழ்க்கையை ரொம்பவும் நேசித்த சில்க் ஸ்மிதாவா தற்கொலை செய்து கொண்டிருப்பார்?

**நா**ம் பேட்டி காணச் சென்றபோது, பர்முடா டிரஸ்ஸில்தான் இருந்தார். ஏறத்தாழ பேட்டி முடிகிற சமயத்தில் அவரைப் புகைப்படம் எடுப்பதற்காக வேறு டிரஸ் அணியச் சொன்னோம்.

"ஏன் இப்படியே எடுத்துக் கொள்ளுங்களேன்!" என்றார்.

"இது இன்றைய நாகரிகப் பெண்கள் வீட்டில் சாதாரணமாக அணிகிற டிரஸ்ஸாக இருந்தாலும் கூட இது கவர்ச்சியுடைதான் என்பதால், கல்கியில் இப்படியெல்லாம் பிரசுரிக்க மாட்டோம்."

"ஐயய்யோ என்னைச் சேலையெல்லாம் கட்டிக் கொண்டு வரச் சொல்லாதீர்கள். எனக்குச் சேலையே கட்ட வராது."

"அலைகள் ஓய்வதில்லை படத்தில் முழுக்க முழுக்கச் சேலை கட்டிக் கொண்டுதானே நடித்தீர்கள்..."

"அதற்கு நான் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல. என் உடம்பில் சேலை நிற்க வேண்டுமே என்பதற்காக சுமார் இருபது பின்களாவது போட்டு விடுவார்கள். ரொம்பவும் கஷ்டமான விஷயம் அது."

"அப்படியானால் நீங்கள் சேலையே கட்ட மாட்டீர்களா?"

"பட்டுப் புடைவை கட்டிக் கொள்ள வேண்டும் என்று நிறைய ஆசை. சிரமம் என்பதால் கட்டுவதில்லை."

"சிரமமே வேண்டாம். மேக்ஸியோ, சுரிதாரோ போட்டுக் கொண்டு வாருங்கள்!" என்றோம்.

இப்படிப்பட்ட சில்க் ஸ்மிதாவா மிகச் சுலபமாக நைலக்ஸ் புடைவையில் தூக்கு மாட்டிக் கொண்டு தற்கொலை செய்து கொண்டார்?

'கொலை செய்யப்பட்டதற்கான அடையாளங்கள் ஏதும் இல்லை' என்று பிரதேப் பரிசோதனை அறிக்கையில் கூறப்பட்டிருந்த போதிலும் இதுபோன்ற இயல்பான சந்தேகங்களுக்கெல்லாம் சந்தேகமில்லாத விடைகள் தேட வேண்டியது மிக மிக அவசியம்.

- **இளங்கோவன்**

கெட்டியாக இறுகப் பிடித்துக் கொண்டிருந்த காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து, நரசிம்மராவ் ஒருவழியாக விலகி விட்டதைத் தொடர்ந்து, அந்தப் பொறுப்பை ஏற்றிருக்கிறார் சீதாராம் கேசரி.

கேசரிக்கு அறுபது ஆண்டுக்கால அரசியல் அனுபவம் உண்டு. பீகார் மாநில தாணாப்பூரில் நவம்பர் 1919ல் பிறந்தார். 13 வயதிலேயே கல்யாணம்! கல்யாணம் முடிந்த கையோடு, சுதந்தரப் போராட்டத்தில் குதித்தார் இளைஞர் கேசரி.

1932 முதல் 1942 வரையிலான பத்து வருடங்களில், ஆறு தடவை சிறைத் தண்டனை அனுபவித்தவர். ஒருமுறை சிறையில் இருக்கிறபோது தான் தகப்பனாரின் மரணச் செய்தி அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. ஒரே மகனாக இருந்தும் கூட, பரோலில் வீடு செல்ல மறுத்து, சிறைவாசத்தைத் தொடர்ந்தார் கேசரி!

சிறை வாழ்க்கையோடு கூட, ராஞ்சி சதி வழக்கில் அவர் மீது வழக்குத் தொடரப்பட்ட போது, அங்கே கடுமையாகத் தாக்கப்பட்டார். பிறகு இட்டத்தட்ட இரண்டு ஆண்டுகள் தலை மறைவு வாழ்க்கை. தீவிரமான காங்கிரஸ் தொண்டர் என்பதோடு, காங்கிரஸ் சேவாதளக் கூட்டங்களில் முரசு அறைந்து அறிவிக்கும் பணியை விரும்பி ஏற்றவர் கேசரி.

ஆனால் சுதந்தரத்துக்குப் பிறகு, சீதாராம் கேசரியின் வாழ்க்கையில், குறிப்பிடத்தக்க பதவிகள் ஏதும் அவர்



# யாரையும் நண்பராக்கிக் கொள்வார் இந்த பீகார் கேசரி!

ஏற்கவில்லை. 1973-ல் பீகார் மாநில காங்கிரஸ் தலைவர் பதவியை ஏற்றவர், 77 வரை அப்பதவியில் தொடர்ந்தார். அதற்குப் பிறகு, காங்கிரஸ் கட்சியின் பொருளாளர் பதவி. தலைமைப் பதவியை ஏற்கிற வரை பொருளாளராகவே இருந்திருக்கிறார் சீதாராம் கேசரி.

இந்திரா, ராஜீவ், நரசிம்மராவ் என்று மூவரிடமும் அமைச்சராகப் பணியாற்றியவர் கேசரி.

1967ல் முதல் தடவையாக மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1971 முதல், தொடர்ந்து மூன்று முறை ராஜ்ய சபா உறுப்பினராக இருந்து வந்திருக்கிறார்.

மண்டல் கமிஷன் பரிந்துரையை ஆதரித்தவர் என்ற வகையில், காங்கிரஸ்காரர்களிடையே தனித்துத் தெரிந்தவர் சீதாராம் கேசரி.

பீகார் மாநிலத்திலிருந்து இதற்கு முன் பாபு ராஜேந்திர பிரசாதும், பாபு ஜகஜீவன்ராமும் காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பதவியை வகித்திருக்கிறார்கள். கேசரி மூன்றாவது பீகார்க்காரர். காந்தி குல்லாயுடன், குழந்தை முகமாகக் காட்சி தரும் சீதாராம் கேசரி யாரையும் எளிதில் நண்பராக்கிக் கொண்டு விடும் தன்மை கொண்டவர். இவரை ஆதரித்து, ஜெ. அறிக்கை விட்டால் கூட வியப்பில்லை!

தங்கபாலுவுக்கு, சீதாராம் கேசரியின் காங்கிரஸ் தலைமைப் பதவி புத்துயிர் கொடுத்திருக்கிறது என்கிறார்கள்!

**- எஸ்.வி.என்.**

# "இது நம்ம ஆட்சியிலா நடந்தது?"



"இது நம்ம ஆட்சியிலா நடந்தது...? இது நம்ம ஆட்சியிலா நடந்தது...?" என்று நம்ப முடியாமல் கேட்டார் கலைஞர்.

"ஆமாங்க. இது நம்ம ஆட்சியில் தான் நடந்தது!" என்றார் திருமதி விஜயா.

இருப்பினும் கலைஞருக்கு நம்பிக்கை வரவில்லை. மறுபடியும் கேட்டார், "இது நம்ம ஆட்சியிலா நடந்தது?"

"ஆமாங்க. இது நம்ம ஆட்சியில் தான் நடந்தது. நேற்று நீங்கள், கோட்டையில் சுதந்தர தினவிழாவில் கொடியேற்றிப் பேசியபோது கூட தூய்மையான ஆட்சி பற்றித்தான் பேசினீர்கள். அந்த நம்பிக்கையில்தான் இந்த விஷயத்தை உங்களுடைய நேரடி கவனத்துக்குக் கொண்டு வந்திருக்கிறேன்..." என்றார் திருமதி விஜயா.

# "ஆமாங்க, இது நம்ம ஆட்சியில்தான் நடந்தது...!"

உடனடியாக அந்தப் புகார் மனு மீது விசாரணை நடத்தி, நடவடிக்கை எடுக்க உத்தரவிட்டார் முதல்வர் கலைஞர். அது தான் அம்பத்தூர் நகராட்சியில் நடந்த ஊழல்கள் பற்றிய மனு.

திருமதி விஜயா தமது மனுவில் சுமார் 45 லட்ச ரூபாய்களுக்கு ஊழல் நடந்திருக்கிறது என்றுதான் குறிப்பிட்டிருந்தார். முதல்வர் உத்தரவின் பேரில் அதை லஞ்ச ஒழிப்புத் துறையின் இணை கமிஷனரான உமாசங்கர் விசாரணை செய்தபோது, 75 லட்ச ரூபாய்களுக்கு மேல் அங்கு ஊழல் நடந்திருப்பதற்கான முகாந்திரம் இருப்பதாகத் தெரியவந்திருக்கிறது!

என்ன மாதிரியான ஊழல்?

பெரும்பாலும் ரோடுகள் போடப்பட்டதிலும் மழைநீர் வடிகால்கள் அமைக்கப்பட்ட



• திருமதி விஜயா

திலும் நடந்த ஊழல்தான் அது. இதை எப்படிக் கண்டுபிடித்தார் திருமதி விஜயா?

அம்பத்தூர் நகராட்சியைச் சேர்ந்த கொரட்டூரிலிருக்கும் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் மற்றும் சுற்றுப்புற மகளிர் சமூகநல சேவா சங்கத்தின் தலைவியாக இருக்கும் திருமதி விஜயாவைச் சந்தித்துக் கேட்டோம்.

"ஆயிரம் உறுப்பினர்களுக்கு மேல் இருக்கும் எங்கள் சங்கம் துவங்கிப் பத்தாண்டுகளுக்கு மேலாகிறது. மகளிருக்கான பிரச்னைகள் மற்றும் பொதுப் பிரச்னைகள் என்று சுற்று வட்டாரத்திலிருக்கும் பிரச்னைகளைத் தீர்ப்பதுதான் எங்கள் சங்கத்தின் பணி. அந்த வகையில் பலரும் எங்கள் சங்கத்தை நாடுவதுண்டு. அப்படி எங்கள் சங்கத்துக்கு வந்ததுதான் இந்த ஊழல் புகார். அ.தி.மு.க. ஆட்சியிலேயே தொடங்கப்பட்டு விட்ட ஊழல் இது.

"முந்தைய ஆட்சியில் இங்கே ரோடுகள் போடப்பட்டபோது, எதுவுமே பொது டெண்டராக இல்லாமல், எல்லாமே விதிகளை மீறி, தங்களுக்கு வேண்டிய காண்ட்ராக்டர்களுக்கே கொடுத்தார்கள். அதில் அமைச்சரிலிருந்து அதிகாரிகள் வரை அனைவருக்குமே பங்கு உண்டு.

"கடந்த மார்ச் மாதத்தில் - பொதுத் தேர்தல்கள் அறிவிக்கப்பட்ட பிறகு - அவசர அவசரமாக 105 வேலைகளுக்கான டெண்டர்களை விட்டுப் பலரும் கமிஷன்களைப் பிரித்துக் கொண்டார்கள். இப்படிக் கமிஷன்களைப் பிரித்துக் கொள்கிறபோது ரோடுகளை எப்படி சரியாகப் போட முடியும்? போட்ட ரோடுகள் எல்லாம் போட்ட ஒரு மாதத்துக்குள்ளாகவே பழையபடி ஆகிவிட்டன.

"இப்படி அடித்த கமிஷன் போதாதென்று இன்னொரு ஐடியா செய்தார்கள். அதுதான் மறு எஸ்டிமேட். அதாவது ஒப்பந்தம் செய்ததை விட சில இடங்களில் அதிக நீள அகலங்களில் போடப்பட்டதாகப் பொய்க் கணக்குக் காட்டி மறு எஸ்டிமேட் என்கிற பெயரில் டெண்டர் தொகைகளை அதிகப்படுத்தி, அதையும் பங்குபோட்டுக் கொள்ள நினைத்தார்கள்.

"அதன்படி 33 ரோடுகள் போடப்பட்டதில் ஏதோ காரணம் காட்டி அவற்றுக்கு மறு எஸ்டிமேட் போட்டார்கள். அதுவும் ஒப்பந்தத் தொகையை விட ஐந்து சதம் பத்து சதம் என்று உயர்த்தி, அவர்கள் மறு எஸ்டிமேட் போடவில்லை... குறைந்தபட்சம் 123 சதமாகவும் அதிகபட்சம் 667 சதமாகவும் உயர்த்திப் போட்டார்கள்! உதாரணமாக முப்பதாயிரம் ரூபாய்க்கு காண்ட்ராக்ட் விடப்பட்ட ஒரு வேலைக்கு மறு எஸ்டிமேட் மூலம் அந்தத் தொகையை இரண்டு லட்சமாக உயர்த்தி விட்டார்கள்!

"இப்படி மறு எஸ்டிமேட் என்கிற பெயரில் மறுபடியும் சுமார் நாற்பது லட்சங்களுக்கு மேல் பாக்கெட்டில் போட்டுக் கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்ட போதுதான் எங்கள் சங்கத்தின் கவனத்துக்கு அது வந்தது. நாங்கள் உடனடியாக இந்தக் கொள்ளை பற்றி அன்றைய முதல்வர் ஜெயலலிதாவுக்குப் புகார் செய்தோம். அது பொதுத் தேர்தல் சமயம் என்பதாலோ என்னவோ, அதிசயமாக ஜெயலலிதாவும், 'அந்த மறு எஸ்டிமேட்டுகளுக்கான செக்குகளை பாஸ் செய்யக் கூடாது' என்று நடவடிக்கை எடுத்து, அந்த செக்குகளை நிறுத்தி வைத்து விட்டார்.



• கவையான குடிநீர்க் கிணறு: பாழடைந்து வருகிறது...

"பிறகு ஆட்சி மாறி, தி.மு.க. ஆட்சிக்கு வந்தது. கடந்த ஆகஸ்ட் மாதம் 13-ம் தேதி 45 லட்ச ரூபாய்களுக்கு மறு எஸ்டிமேட்டுக்கான செக்குகள் வழங்கப்பட்டு விட்டதை அறிந்ததும் - அதுவும் ஜெயலலிதாவே நிறுத்தி வைத்திருந்த செக்குகளை தி.மு.க. ஆட்சியில் வழங்கப்பட்டதை அறிந்ததும் எங்களுக்கெல்லாம் அதிர்ச்சி! அதனால் அடுத்த நாளே முதல்வர் கலைஞருக்கு நடந்த முறைகேடுகளை ஃபேக்ஸ் மூலம் அனுப்பினோம்.

"ஃபேக்ஸில் அனுப்பப்பட்ட எங்கள் புகாருக்கு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்



• சரோஜா

படாமல் போய் விடுமோ என்கிற பயத்தில், ஆகஸ்ட் 16-ந் தேதி முதல்வர் கலைஞரை நேரிலேயே சந்தித்துப் புகார் செய்தோம்.

"அப்போதுதான் முதல்வர் கலைஞர் நம்ப முடியாமல், 'நம்ம ஆட்சியிலா நடந்தது இது?' என்று எங்களைத் திருப்பித் திருப்பிக் கேட்டார். நாங்களும் (நாங்கள் என்பது எங்கள் சங்கத்தைச் சேர்ந்த ஐந்து பெண்கள்) 'ஆமாம்' என்று சொன்னோம். முதல்வரும் உடனடியாக நடவடிக்கை எடுக்க உத்தரவிட்டார். இப்போது சம்பந்தப்பட்ட சில அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார்கள்!" என்று நடந்த விஷயத்தை விளக்கினார் திருமதி விஜயா.

"நீங்கள் இப்படி முதல்வரிடம் புகார் கொடுத்ததன் விளைவாக சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து மிரட்டல்கள் ஏதும் வந்திருக்க வேண்டுமே?"

"அதையேன் கேட்கிறீர்கள்? அன்றிரவே எங்கள் வீட்டின் மேல் கற்கள் விழுந்தன. ஆகஸ்ட் 24-ந் தேதி தி.மு.க.வினர், எங்கள் பகுதியில் ஒரு பொதுக் கூட்டம் போட்டு, என்னையும் மற்ற சங்க உறுப்பினர்களையும் சொல்ல முடியாத அளவுக்குக் கெட்ட வார்த்தைகளால் திட்டினார்கள்."

"தி.மு.க.வினரா அப்படிச் செய்தார்கள்?"

"ஆமாம். இங்குள்ள தி.மு.க. நகரச் செயலாளர் நாதன்தான் அப்படிச் செய்தார். காரணம் அவரும் அ.தி.மு.க.வினரோடு சேர்ந்து கொண்டு கமிஷன்களில் பங்குபெற்று வந்தவர் தான். நகராட்சி ஆணையர் சிவணுவை தாற்காலிக வேலை நீக்கம் செய்தால் தாங்கள் சாலை மறியலில் ஈடுபடப் போவதாக மேலதிகாரிகளுக்கு எச்சரிக்கை செய்தவர்தான் தி.மு.க நகரச் செயலாளர் நாதன்!

"இவை பற்றியெல்லாம் மறுபடியும் விவரமாக எழுதி, எங்களுக்குப் பாதுகாப்புத் தர வேண்டுமென்று மறுபடியும் முதல்வருக்கு எழுதியிருக்கிறோம்!" என்று சொன்ன திருமதி விஜயா, தற்போது நடக்கும் உள்ளாட்சித் தேர்தலில் வார்டு மெம்பராகப் போட்டியிடுகிறார், சுயேச்சையாக.

"ஆக, ஒரு செல்வாக்குக் கிடைத்ததும் தேர்தலில் போட்டியிடுகிறீர்களா?" என்றோம்.

"பதவிக்காக நாங்கள் போட்டியிடவில்லை. மொத்தமுள்ள 52 வார்டுகளில் எங்கள் மகளிர் மன்றத்தின் சார்பில் ஐம்பது வார்டுகளில் போட்டியிடுகிறோம். குறைந்தபட்சம் 15 வார்டுகளிலாவது நாங்கள் வெற்றி பெறுவோம் என்று நம்புகிறோம். எதற்காக? நகராட்சியில் நடக்கும் ஊழல்களை எதிர்த்து வெளியிலிருந்து போராடுவதை விட உள்ளிருந்து போராடுவது மேலும் சுலபமாக இருக்கும் என்கிற ஒரே காரணத்துக்காகத்தான் போட்டியிடுகிறோம்.

"இதிலும் கூட அரசியல் தலையீடு. நான் இப்போது போட்டியிடும் 24-வது வார்டு முதலில் பெண்களுக்கு ஒதுக்கப்பட்ட வார்டாகத்தான் இருந்தது. தொகுதி எம்.எல்.ஏ. ஆருண் (த.மா.க.), தமக்கு வேண்டிய கட்சிக்காரர்களைப் போட்டியிடச் செய்ய வேண்டும் என்பதற்காகவே இதை பொது வார்டாகச் செய்து விட்டார். இதுபற்றி நாங்கள் தேர்தல் முடிந்த பிறகு வழக்குத் தொடரலாமென்றிருக்கிறோம்!" என்று சொல்லும் திருமதி விஜயா, பொதுவாகவே அம்பத்தூர் நகராட்சியின் செயல்பாட்டில் மிகுந்த அதிருப்தியாகத்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



"என் கணவருக்கு ஒரு விவரமும் தெரியலடி?"

"ஏன் அப்படிச் சொல்ற...?"

"ஹோட்டல் முதலாளி கிட்ட, 'பூரிக்கு எப்படி காத்து அடிச்சீங்க...!'ன்னு கேட்கிறார்!"

— தேனி எஸ். மாரியப்பன்

தான் இருக்கிறார்.

"எங்கள் பகுதி தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்திடம் இருந்தவரை மிக நன்றாகவே இருந்தது. வாரியம் தனது வேலைகளையெல்லாம் முடித்து நகராட்சியிடம் ஒப்படைத்த பிறகு தான் எதுவுமே சரியில்லை. உதாரணத்துக்குக் குடிநீர். எங்கள் பகுதிக்குக் குடிநீர் சப்ளை செய்வதற்காக வாரியம் மூன்று கிணறுகளை அமைத்துத் தந்தது. அதில் ஒரு கிணற்றின் நீர் மிகுந்த சுவையான நீர். கிணறுகள் ஏதும் மேலே மூடப்படாமல் திறந்து கிடப்பதால், சுவையான குடிநீர் உடைய அந்தக் கிணற்றில் ஒருநாள் ஒரு பிணம் மிதந்தது. அப்படி மிதப்பதும் சில நாட்கள் கழித்தே கண்டுபிடிக்கப்பட்டது. அப்புறம் அந்தக் கிணற்றிலிருந்து நீர் ஏற்றுவதையே நிறுத்திவிட்டு, லாரிகளில் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். அதில் நல்ல 'கமிஷன்' என்பதால் அந்தக் கிணற்றைச் சுத்தப்படுத்தி மறுபடியும் உபயோகிக்கும் எண்ணத்தையே விட்டு விட்டார்கள்.

"இதுபற்றியெல்லாம் இந்தப் பகுதிக்கு வந்திருந்த உள்ளாட்சித் துறை அமைச்சர் கோ.சி. மணி அவர்களிடமும் புகார் கொடுத்திருக்கிறோம். ஆனாலும் நடவடிக்கை ஏதும் எடுக்காததுதான் ஆச்சரியமாக இருக்கிறது!" என்கிறார் திருமதி விஜயா.

"ஏழைகளுக்கான மத்திய அரசின் திட்டங்களில் கூட அதிகாரிகள் புகுந்து விளையாடி விட்டார்கள்!" என்கிறார் சங்கத்தின் பொருளாளர் திருமதி சரோஜா.

இப்போது ஊழலுக்காக நடவடிக்கை எடுக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அம்பத்தூர் நகராட்சி என்பது ஓர் உதாரணம்தான். இதே போல் மற்ற நகராட்சிகளில் என்னவெல்லாம் நடந்து கொண்டிருக்கின்றன என்பதையும் அரசு கண்காணிக்க வேண்டும்.

'ஊமை ஜனங்களும் செவிட்டு அரசாங்கமும் ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியாது' என்றார் ராஜாஜி. நல்லவேளையாக இப்போது ஜனங்கள் பேச ஆரம்பித்திருக்கிறார்கள். இன்றைய முதல்வரும் தமது காதுகளைக் கூர்மையாகத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறார்.

என்றாலும் முதல்வர் மாத்திரம் காதுகளைத் திறந்து வைத்துக் கொண்டிருந்தால் போதாது. முதல்வர் அளவுக்கு மற்ற அமைச்சர்களும் திறந்து வைத்திருக்க வேண்டும். குறிப்பாக ஆங்காங்கே இருக்கும் சில உடன்பிறப்புகளை அவசியம் கண்காணிக்க வேண்டும். இல்லையெனில் அந்தச் சில உடன்பிறப்புகள் 'உடன்பிறவாச் சகோதரர்'களாகி விடுவார்கள்! மிகுந்த கவனம் தேவை.

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

படங்கள் : **பேஜர். கே. மூர்த்தி**

# எங்கே, ஆஸ்தான கவி?

**பாலசந்தரின் அடுத்த படமான கல்கியில் அவரது ஆஸ்தான கவிஞர் வைரமுத்து பாடலெழுதக் காணோம். மோதலா? ஊடலா? - சம்பந்தப்பட்டவர்கள் வாய் திறக்க மறுக்கிறார்கள். எப்படியோ, திரையுலகுக்கு பாலச்சந்தர் மூலம் புதிய கவிஞர் கிடைத்திருக்கிறார். பெயர் : இளந்தேவன்.**

**ஏராளமான கவியரங்கங்களில் பங்கேற்றவர். விருதுகள் குவித்தவர். ஒருமுறை மலேசியாவில் இவரது கவியரங்கம் நடந்தபோது இருபது நிமிடங்களில் ஒன்றரை லட்சம் ரூபாய்க்கு இவர் எழுதிய புத்தகங்கள் விற்றதாம்! (நிஜமாவா!).**

**''அம்மா'' ஆட்சியில் அரசு செய்தித்துறையிலும், தமிழரசு இதழிலும் செல்வாக்காக இருந்தவர். ''அப்பா'' ஆட்சியில் தூர தேசத்திற்கு தூக்கியெறியப்பட்டாலும்.... பாலச்சந்தரின் பார்வை பட்டு மீண்டுமொரு சுக்ரதசை.**



**• இளந்தேவன்**

**''கவிஞன் என்பவன் இந்த சமூகத்திற்காக, அதன் மாறுதலுக்காகப் பாடுபட வேண்டும். இதை மனத்தில் கொண்டு ஒவ்வொரு கவியரங்கையும் வேள்வியாகச் செய்திருக்கிறேன்'' என்று கூறும் இளந்தேவன், திரைப்படத் துறையிலும் அதைச் செய்வாரா? அல்லது ''முக்காபலா'' மாதிரி பாடுவாரா?**

**— அண்ணா அன்பழகன்**

கபீர்தாசர் இந்து, முஸ்லீம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டவர். அவரை இந்துக்களும் திட்டினார்கள். முஸ்லீம்களும் திட்டினார்கள். கபீர்தாசர் சிரித்தார். இந்துக்களும், முஸ்லீம்களும், "என்னையா! நாங்கள் திட்டுகின்றோம். நீங்க சிரிக்கிறீக்களே, ஏன்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர், "என்னைத் திட்டுவதில் நீங்கள் இருவரும் ஒற்றுமையாக இருக்கிறீர்களே, அதனால்தான்" என்றார்.

— 'வாரியார் சொற்பொழிவில் கேட்டவை' நூலிலிருந்து : ஆர். பார்த்திபன்

ஒரு சூடான விவாதம்:

# அழகிப் போட்டி அநாகரிகமானதா?

**வா**சுகி : பொதுவா, போட்டின்னா அதுக்கு ஒரு அர்த்தம் இருக்கும். அழகிப் போட்டி எதுக்காக, ஜெயஸ்ரீ?

**ஜெயஸ்ரீ** : உலக அளவுல நடக்கிறது வருஷக்கணக்கா. போட்டின்னு வந்திட்டாலே எல்லார் கவனமும் அதில திரும்புது. அதனால அந்தப் போட்டியில அர்த்தம் இருக்கு.

**வாசுகி** : அர்த்தம் சரி. பயன் ஏதாவது இருக்கா, சொல்லுங்க.

**ஜெயஸ்ரீ** : ஐஸ்வர்யா ராய், சுஷ்மிதா சென் இவர்களால இந்தியாவுக்குப் பெருமை கிடைச்சதே? நிறைய ஃபைனான்ஷியல் ஹெல்ப் கிடைச்சது. நம்ம டிரஸ்ஸஸ்க்கு எக்ஸ்போர்ட் ஆர்டர் கிடைச்சது.

**வாசுகி** : அந்நியச் செலாவணி ஏராளமாகக் கிடைச்சதுங்கறதை ஒப்புக்க மாட்டேன். அப்படி ஒண்ணும் இந்தியாவுக்கு அழகிப் போட்டியால எக்ஸ்போர்ட் ஆர்டர் கிடைச்சுடலே.

**ஜெயஸ்ரீ** : சர்வதேச அரங்கில் அழகிப் போட்டியினால இந்தியாவுக்குப் பெயர், புகழ் எல்லாம் கிடைச்சது. இதை எப்படி மறுக்க முடியும்?

**வாசுகி** : ஒலிம்பிக்ல ஜெயிச்சிருந்தா



• ஜெயஸ்ரீ மணியன்

**ஜனநாயக மாதர் சங்க அமைப்பைச் சேர்ந்த வாசுகியும், சிவில் இஞ்சினீயரிங் பட்டதாரியான ஜெயஸ்ரீமணியனும் காரசாரமாக விவாதிக்கிறார்கள்.**

அதப் பாராட்டலாம். சர்வதேச அளவுல ஒரு நோபல் பரிசு கிடைச்சிருந்தா அதைப் பாராட்டலாம். அப்படி எதுவும் இல்லையே இதுல? பெண்ணோட அழகை எக்ஸ்ப்ளாயிட் பண்ணி, பன்னாட்டு நிறுவனங்கள் தங்கள் வியாபாரத்தைப் பெருக்கிக் கொள்ளத்தான் இதெல்லாம் நடத்தறாங்க.

**ஜெயஸ்ரீ** : அப்படியே பார்த்தாலும் பிஸினஸ் ஆகிறதே?

**வாசுகி** : அவன் பிஸினஸ் பண்ணி அவனே எடுத்துட்டுத்தானே போகிறான்? இந்தியாவுக்கு என்ன பிரயோஜனம்? சமுதாயத்துக்கு ஏதாவது பலன் இருக்கா, சொல்லுங்க. திறமையை வெளிக்காட்டற அம்சம் ஏதாவது இருக்கா?

**ஜெயஸ்ரீ** : அழகுக்கு அங்கீகாரம் கிடைக்கறதால, பல சமூக சேவை நிறுவனங்கள் மூலமா சமூகத்துக்கு உதவியிருக்காங்களே? வெறும் சுஷ்மிதா சென்னாவோ, ஐஸ்வர்யா ராயாவோ இருந்திருந்தா அதை எல்லாம் செய்திருக்க முடியுமா?

**வாசுகி** : மதர் தெரசா மாதிரியா சமூக சேவை செய்துடறாங்க? நானும் கூடத்தான் சமூக சேவை செய்யறேன், எங்க அமைப்பு மூலமா... எவ்வளவோ சினிமா நட்சத்திரங்கள் கூட இப்பல்லாம் சமூக சேவை செய்யறாங்க. அதனால, அழகா இருந்து புகழ்பெற்றாத்தான் சமூக சேவை செய்ய முடியும்னு சொல்றது சரியில்லையே!

**ஜெயஸ்ரீ** : சரி. உங்களோட

• **வாசுகி**





"என்னங்க இது? குரங்கோட வர்றீங்க?"
"டிவி.யில நமக்கு முதல் பரிசு 'மாருதி'—ன்னு சொன்னாங்கல்ல? அது, இது தானாம்..."

— ஆர். வசந்தகுமார்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

எதிர்ப்புக்குக் காரணங்கள் என்னென்ன?

**வாசுகி** : ஒண்ணு, ஏற்கெனவே பெண்கள் என்றாலே சமுதாயத்தில் அவர்களைக் கௌரவமாகப் பார்க்கிறதில்லே. Figure, Sight, Colour ஆகத்தான் பார்க்கிறாங்க. அவங்களுக்கும் மூளை இருக்கு, திறமை இருக்குன்னு ஒத்துக் கொள்றாங்களா? பெண்ணுன்னா அழகா இருக்கணும்; அடக்கமாக இருக்கணும்ங்கற கான்செப்ட்தானே இருந்து கொண்டிருக்கு? அதை இன்னும் வலுப்படுத்தத்தான் இந்த மாதிரி அழகிப் போட்டி எல்லாம் நடக்கிறது.

ஏற்கெனவே தாராளமயமாக்கல் மூலமா கலாசாரத் தாக்கம், சீரழிவு வந்து கொண்டிருக்கு. பெண்ணை ரசிக்கிற மனோபாவம் வளர்ந்து, கற்பழிப்பு, பெண்கள் மீதான தாக்குதல்கள் என்று நிலைமை மோசமாயிட்டிருக்கு. டீவியில் பார்க்கிறதை எல்லாம் வாங்கிடணும்னு ஒரு நுகர்பொருள் கலாசாரம் பூதாகாரமா வளருது.

ரெண்டாவது, பெண்ணை ஒரு பண்டமாக, அழகுப் பதுமையாகப் பார்த்து, அவளால் சுகப்படணும் என்ற சிந்தனை வரும்போது, பாலியல் பலாத்காரங்கள் அதிகமாகுது.

மூணாவது, ஒருசில டாலர்கள் அந்நியச் செலாவணி கிடைக்குதேங்கறதுக்காக மட்டும் இதை ஆதரிக்கக் கூடாது.

**ஜெயஸ்ரீ** : அழகிப் போட்டியாலதான் பெண்கள் கெட்டுப் போறாங்கன்னு சொல்லிட முடியாது. டீவியிலயே எத்தனையோ மோசமான படங்கள் போடறாங்க... 'சைட்டு'ங்கறதே ஒரு சாதாரண வார்த்தையா ஆயிடுச்சு. காலேஜ் கேர்ள்ஸ் சில பேர் கூட, ஆண்களை ரசிச்சு, கமெண்ட் அடிக்கிறதில்லையா?

**வாசுகி** : காலேஜ் நாட்கள்ள அது சகஜம்! அந்த வயசுல அப்படி பேசறதும், நடந்துக்கறதும் சகஜமா இருக்கலாம். நான் மறுக்கலே.

**ஜெயஸ்ரீ** : அது ரசிப்புத் தன்மைதானே? அதை ஆதரிக்கறதுலே என்ன தவறு?

**வாசுகி** : நமக்குத் தெரிஞ்சவங்க, நம்ம வீட்டுக் குழந்தைங்க – இப்படி இவங்களை ரசிக்கிறது சரி. ரோட்டுல போற – வர்றவங்களை கமென்ட் அடிச்சு ரசிக்கிறது ஆரோக்கியமானதில்லே... அழகிப் போட்டியில, மார்பளவு, இடுப்பளவுன்னு வெளிப்படையா மார்க் போட்டு, அதுக்காக அவங்களைச் சிறந்தவங்கன்னு பாராட்டறதுதான் கண்டிக்க வேண்டிய விஷயம். பெண்ணை மனுஷியாகப் பார்க்கணும். அவளோட சுய கவுரவத்தை மதிக்காம, அழகு அழகுன்னு சொல்லி அவளை ஒரு அலங்காரப் பதுமையாப் பார்க்கறதை நான் ஏற்க மாட்டேன். அழகை வைத்து மார்க் போடுவதெல்லாம் ரசிகத்தன்மைலே இல்லே. போதாததுக்கு, மீடியா வேற பெண்களை மோசமா சித்திரிக்கிறது...

**ஜெயஸ்ரீ** : அதுக்கு நீங்க என்ன பண்ணறீங்க?

**வாசுகி** : இயக்கங்கள் மூலமா போராடறோம். தணிக்கைக் குழு அதிகாரிகளுடன் சண்டை போட்டுக்கிட்டிருக்கோம். தப்புப் பண்றது பூரா கணவனா இருக்கும். கடைசில, 'கௌரி, என்னை மன்னிச்சுடு'ன்னு சொல்லிட்டு, அப்பக்கூட 'மன்னிச்சுடு'ன்னு சொல்றதுக்கு முன்னாலயே மனைவி அவன் வாயைப் பொத்திடுவா!... ஆபாச போஸ்டர்களை எதிர்த்துப் போராடி வர்றோம். பாலியல் பலாத்காரத்துக்கு ஆளான பெண்கள் சார்பில வாதாடறோம்... சரி. விஷயத்துக்கு வருவோம். அழகிப் போட்டில திறமை வெளிப்படுத்தப்படறதா?

**ஜெயஸ்ரீ** : நிச்சயமா. அவங்க எப்படிப் பதில் சொல்றாங்கன்னு கவனிக்கறாங்க.

**வாசுகி** : நீங்க முக்கியமாக் கவனிக்கணும். அழகிப் போட்டில முதல் தகுதியே அழகா இருக்கறதுக்குத்தான்! இதுவே கல்லூரிகளிலே, ஒவ்வொரு ஏரியாவுலே, டீவி அளவுலே பெருகற போது, இளையதலைமுறை கவனம் செலுத்த வேண்டியவை மீது செலுத்தாமல் தவறிவிடுகிறது; யதார்த்தங்கள் திசை திருப்பப்படுகின்றன... கல்லூரி மாணவப் பருவ கமென்ட்டுகள் பத்திச் சொன்னீங்க. சுதந்தரப் போராட்டத்தின் போது எத்தனை இளைஞர்கள் அதில் குதித்தார்கள்!

அவர்களுக்கு இளமையின் இயல்பான உணர்வுகளையும் மீறி இலட்சிய நோக்கு இருந்தது. ஆனா இன்னைக்கு இருக்கற ஆயிரக்கணக்கான பிரச்னைகள் பத்தி யார் கவலைப்படறாங்க?

**ஜெயஸ்ரீ** : அழகா இருக்கணும்ங்கற போது, ஸ்மார்ட்டா, நீட்டா இருக்கணும்ங்கறதுதானே. இதுல ஒரு தவறும் இல்லையே?

**வாசுகி** : நீட்டா இருக்கறதுல எந்தத் தவறும் இல்லே. ஆனா சுத்தி நடக்கற விஷயங்கள் பத்தி ஒரு சிந்தனையோ, ரியாக்‌ஷனோ இல்லாம இருக்கறது தப்பில்லையா? 'சைட்' ரொம்ப காமன் ஆயிடுச்சுன்னீங்க. 'ஜொள்ளு' கூட அச்சப்படட் வார்த்தையாயிடுச்சு இன்னிக்கு. இதைப் பத்திக் கேவலமா நினைச்சுப் பார்க்கக் கூடத் தயாரில்லே! ஆண் - பெண் உறவுகள் பத்தின ஆரோக்கியமான சிந்தனை வளர்றதுக்கு இந்த மாதிரி அழகிப் போட்டிகள் நிச்சயமா உதவப் போறதில்லே. அவங்களை ப்ரமோட் பண்ற வியாபார நிறுவனங்களுக்கு நிறையப் பணம் கிடைக்கிறது என்கிறது தவிர வேறு ஒண்ணும் இல்லை.

செப்டம்பர் 9-ஆம் தேதி கர்நாடக முதல்வர் ஜே.எச். பட்டேல்கிட்டே சொன்னோம் - அழகிப் போட்டியை நிறுத்துங்க. நம்ம கலாசாரத்துக்கு ஏற்றதில்லே என்றோம். "திரௌபதியை துகிலுரிஞ்சது, சீதையை ராவணன் தூக்கிக் கொண்டு போனது எல்லாம் நம்ம கலாசாரம்தானே? அழகிப் போட்டியினால நீங்க நினைக்கிற கலாசார சீரழிவு ஒண்ணும் வந்துடாது"ன்னார். இதை அப்படியே பிரதமர் தேவேகௌடாவிடம் சொன்னோம். அவருக்கே கேட்கக் கஷ்டமாய் இருந்துது. 'நான் படேலுக்குக் கடிதம் எழுதறேன்'னார். அதனாலதான், இதுமாதிரி அழகிப் போட்டிகள் தேவை இல்லை; பெண்கள் ரசிக்கத் தகுந்த, சுகிக்கத் தகுந்தவர்கள் மட்டுமே என்ற எண்ணத்தைத்தான் இவை பரப்புகின்றன என்று உறுதியாகச் சொல்லுகிறேன்.

**ஜெயஸ்ரீ** : நான் என்னோட நிலையிலேருந்து மாறுகிறேனோ இல்லையோ, நீங்க விவாதிச்ச பாயின்ட்டுகள் எனக்குப் பிடிச்சுது! நன்றி.

**வாசுகி** : வணக்கம்!

தொகுப்பு : **சாருகேசி**

வண்ணப்படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

அட்டையில் - **ஐஸ்வர்யா ராய்;**

வண்ணப்படம் : **யோகா**



"அது உண்மையான துப்பாக்கியாயிருந்தால் முதல்லே இவளைச் சுடு. அப்பதான் நான் நம்புவேன். பீரோ சாவியையும் கொடுப்பேன்."

-ஏழ்வரைக்கடியான்



''என்கிட்ட வர்றவங்களைக் கொலை பண்ணலாம் போலத் தோணுது; ஆனா இதுவரை நான் யாரையும் கொலை பண்ணல, டாக்டர்!''

''நீங்க பரவாயில்லையே; என்கிட்ட வர்றவங்களைக் காப்பாற்றணும்னு எனக்குத் தோணுது; ஆனா காப்பாற்ற முடியலையே!

- த. அருள்



''என்னடா அவரு 'இனி துன்பமில்லை ஒரு துயருமில்லை... இனி வம்புமில்லை ஓர் வழக்குமில்லைன்னு' ஜாலியா பாடிட்டே போறாரு...''

''அவருக்குப் போன ஆட்சியிலே மந்திரி பதவி கிடைக்காததை நெனச்சு சந்தோஷமா இருக்கார்!''

- ஜமாலியா


நேரத்துக்குச் சாப்பிடணும்;
கீரைகள் சேர்த்துக்கணும்!
இல்லைன்னா...

பெரும்பாலானோர் வயிற்றுவலிக்காகத் தான் டாக்டர் வீட்டுக்குப் போறாங்க. மருந்துக் கடைகள்ல விசாரிச்சீங்கன்னா வயிற்றுக் கோளாறு சம்பந்தமான மருந்துகள்தான் அதிகமா விற்பனை ஆறது தெரியவரும்.

இது ஏன்?

நம்ம ஊர் சீதோஷ்ணம், நாம சாப்பிடற உணவு இவைகளுக்கும் சராசரி இந்தியர்களின் உழைப்புக்கும் என்ன சம்பந்தம்னு பார்த்தால், நிறைய பேருக்கு வயிற்றுவலி வர்றதுக்கான காரணம் தெரிஞ்சிடும்.

ஆரோக்கிய உணவு, சத்துணவு, போதுமான உணவு அப்படி இப்படீன்னு பேசலாம். எழுதலாம். ஆனா, நடைமுறையில ஒரு நாளைக்கு சுமார் ஒன்பது மணி நேரம் உழைக்கறவங்களுக்குத் தேவையான சத்துணவு கிடைக்கறதில்லை அல்லது எடுத்துக்கறதில்லைங்கறது தான் உண்மை.

உழைச்சிட்டே இருந்து, வயிற்றுக்கும் போதுமான உணவு போடலைன்னா சிக்கல் வருது. அமிலம் சுரக்குது. அதனால வயிறு பாதிக்கப்படறது.

விளைவு? வயிற்றுப் புண், குடல் புண், வலி, நரம்புகள் இழுத்துக்கறது அப்புறம் மருந்து, மாத்திரை, ஆப்பரேஷன்...

மனித உடல்ல வயிறு ஒரு முக்கியமான பிரதேசம். வண்டிக்கு பெட்ரோல் டாங்க் மாதிரி. அதைக் கவனிக்க வேண்டாமா?

அதுக்குன்னு ஒரேயடியா தீனியா போட்டு அடைச்சாலும் பிரச்னைதான். அதே வயிற்று வலி அப்பவும் வரும்.

சாப்பாட்டு விஷயத்துல மூணு சமாசாரத்துல கவனமா இருக்கணும்.

1. குறிப்பிட்ட நேரத்துல சாப்பிடறது
2. குறிப்பிட்ட அளவு சாப்பிடறது
3. ஓரளவுக்கு சத்துள்ள உணவா சாப்பிடறது

இதுல, 'குறிப்பிட்ட நேரம்' அப்படீங்கறது ரொம்ப முக்கியம். நம்ம ஊர் சினிமாக்காரங்கள்ல பெரும்பாலானோருக்கு அல்சர் பிராப்ளம் இருக்கு தெரியுமா? லஞ்ச் டயத்துல ஸ்டுடியோ பக்கம் போய்ப் பாருங்க. ஆளாளுக்கு ஏதாவது ஒரு மாத்திரை முழுங்கிட்டே இருப்பாங்க.

காரணம்? அவங்க சாப்பாட்டுக்கு நேரம் காலம் கிடையாது. கிடைக்கிற நேரத்தில அள்ளி அடைச்சிக்கிட்டு ஓடிக்கிட்டே இருப்பாங்க.

சாப்பிடறது ஒரு கலை. வேகவேகமா அள்ளி அடைச்சிக்கறது மகா தப்பு. உணவுப் பொருள் அரைபடறது இல்லைங்கறது ஒரு பக்கம் - அதனால ஜீரணக் கோளாறு ஏற்படும். இதனாலயும் வயிற்று வலி வரும்!

முக்கியமான விஷயம் - ஆஸ்பிரின் மாதிரி வீரியமுள்ள தலைவலி மாத்திரைகள் நிறைய எடுத்துக்கறதாலயும் வயிற்றில் புண் ஏற்படுதுன்னு சமீபத்துல கண்டுபிடிச்சிருக்காங்க.

பவர்ஃபுல் மாத்திரைகள் எதுவானாலும் டாக்டரைக் கேட்காம சாப்பிடாதீங்க. (எந்த மாத்திரையுமே நாமளா முடிவு பண்ணி எடுத்துக்கறது சரியில்லை.)

பொதுவா கீரைகள், நார்ச்சத்துள்ள காய்கறிகள் நிறைய சாப்பிடறவங்களுக்கு வயிற்றுத் தொல்லை எதுவும் வராது. அதுக்கு மாறா, நிறைய எண்ணெய்ப் பலகாரங்கள், கார ஐட்டங்கள், கூல்டிரிங்க்ஸ் சாப்பிடறவங்களுக்கு அல்சர் வரத்தான் செய்யும்.

குறிப்பா இந்த ஸாஃப்ட் டிரிங்ஸ் விஷயத்துல கவனமா இருக்கணும். அதுல கலக்கற ஃப்ளேவர், கேஸ், சாக்ரின் எல்லாம் - கெடுதல் இல்லைன்னாலும் அத்தனை நல்லதில்லை.

பரம்பரையாகவும் சிலருக்கு அல்சர் வர வாய்ப்பு இருக்கு. அப்பா - அம்மாவுக்கு இந்தத் தொந்தரவு இருந்தா பிள்ளைகள் சின்ன வயசிலேருந்தே உணவு விஷயத்துல கவனமா இருக்க வேண்டியது அவசியம்.

கடைசியா ஒரு விஷயம். குடிப்பழக்கம் உள்ளவர்களுக்கு வேற எது வருதோ இல்லையோ, அல்சர் சத்தியமா வந்துடும்.

சாதாரண ஜனங்களுக்கு அல்சர் வந்தா சரிபண்ணிடறது சுலபம். குடிப்பழக்கம் இருக்கறவங்களுக்கு வந்துட்டா ரொம்பக் கஷ்டம். வலி அவங்களை ஒரு வழி பண்ணிடும்.

காரணம், குடிச்சிக் குடிச்சி அவங்க குடல், ஏற்கெனவே செல்லரிச்ச மரம் மாதிரி ஆயிருக்கும். அதுல புண் வேற வந்து, அதுக்கு ஸ்ட்ராங் டோஸ் மருந்து வேற குடுத்தா ஒரு வழி ஆயிடும். அவங்க படற கஷ்டத்தைக் கண்கொண்டு பார்க்க முடியாது.

என் ஃப்ரெண்ட் மாலுன்னு ஒருத்தி இருக்கான்னு சொன்னேனே, அவளோட சித்தப்பா செமை தண்ணி பார்ட்டி.

அவருக்குக் குடல்புண் வந்து தொலைக்க, வலி தாங்காம ஒருநாள் சூசைட் பண்ணிண்டு செத்தே போயிட்டார்.

இதுல இருக்கற ரிஸ்க் இப்ப முழுசாப் புரிஞ்சிருக்கும்னு நினைக்கறேன்.

- சுமி

# ஒற்றுமையே வாழ்வின் சாராம்சம்



**தந்தையும் மகனும்**

அன்பு, அக்கறை, நம்பிக்கை, தைரியம் என்ற அடிப்படைகளின் மேல் எழுந்த ஒரு இனிய உறவு. காலம் செல்லச் செல்ல வலிமையுறும் பிணைப்பு. இருவருக்கும் சக்தி ஊட்டி, போஷித்துப் பாதுகாக்கும் நட்புணர்வு அது.

நட்புணர்வு. ஒன்றுபடச் செய்யும் ஒரு உணர்வு. வாழ்வை அர்த்தமுடையதாக்கி ஒளிரச் செய்வது அது. நாளையத் தேவைகளான திருமணம், கல்வி இன்னும் பிற சுப காரியங்களுக்காகவும் திட்டமிட்டு சேமித்து எதிர்காலத்தை வாழ்வதற்குகந்த, பாதுகாப்புமிக்க இடமாக்குவதும் அதுவே. முக்கியமாக, சேமிப்பதற்கும், தேவை ஏற்பட்டால், உங்களது பணத்திலிருந்தே பெருமையுடனும் உரிமையுடனும் கடன் பெற்றுக் கொள்வதற்கும் ஏதுவாக அரியதொரு வசதியைத் தருகிறது. வாழ்க்கையை நம்பிக்கையுடன் எதிர்கொள்ளும் வாய்ப்பை நல்குகிறது.




ராம் காஷ்யப். உங்களது தேவைகளை புரிந்து கொள்கிறது. அத்துடன் அவற்றை நிறைவேற்றும் வழி முறைகளைத் தனது பல்வேறு சீட்டுத் திட்டங்கள் மூலம் அளிக்கிறது. இத்திட்டங்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் நிறுவனத்திடையே நெருக்கத்தை ஏற்படுத்தி வாடிக்கையாளரின் தேவைகளைப் புரிந்து கொள்ளவும் தக்க சமயத்தில் அவற்றை நிறைவேற்றி வைக்கவும் வகை செய்கிறது. நிலையில்லாததோர் உலகினிலே பாதுகாப்பான ஒரு நங்கூரம் ராம் காஷ்யப் சிட்ஸ். எதிர் காலத்திற்காக முதலில் திட்டமிடுவது, பின் உடனேயே சேமிப்பில் இறங்குவது என்ற கருத்தினை உருவாக்கியவர்கள்.

**விரைவீர்!**
பாதுகாப்பானதோர்
எதிர்காலத்திற்கு
ஒன்றுபடுவோம் வாரீர்!

ஆதாய பாத்திரம் சீட்டு விழா
18th to 31st October '96

**Ram Kaashyap**
Chits Private Limited
Member Ram Kaashyap Group

**நிர்வாக அலுவலகம் :** 1/1, சர் தேசிகா ரோடு, (ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில்), மைலாப்பூர், சென்னை 600 004. போன் : 4970205, 4998325.

**கிளைகள் : சென்னை :** • ஆழ்வார்பேட்டை, மேற்கு மாம்பலம், அண்ணா நகர், அடையாறு, தி.நகர், • கோயம்புத்தூர் • கும்பகோணம் • மதுரை • தஞ்சாவூர் • திருச்சி • ஈரோடு • சேலம் • திருவாரூர் • ஹைதராபாத் • செகந்திராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • மீர்யால்குடா • ராஜமுந்திரி • மச்சிலிபட்டினம் • ஏலுரு • காகிநாடா

**ஈடில்லா சேமிப்பு. இணையற்ற தேர்வு**

insight-412



# சபாஷ்

அப்பா நீதிபதி, அண்ணன் அமைச்சர், தம்பி மிலிட்டரியில் ஏதோ உயர்பதவி என்று குடும்பமே ஒவ்வொரு வகையில் 'நாட்டுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்க, அமைச்சராக இருப்பதாலேயே அண்ணனாகப்பட்டவர் வில்லனாகி விடுகிறார். நாட்டுக்கு அப்புறம்தான் வீடு என்று இருக்கும் தம்பி, க்ளைமாக்ஸில் என்ன செய்வார் என்று சொல்ல வேண்டாம்.

ஆர்.வி. உதயகுமார் – அர்ஜுன் என்பது புதிய காம்பினேஷன். பத்து நிமிஷம் அர்ஜுன் படம் போலவும் அடுத்த பத்து நிமிஷம் உதயகுமார் படம் போலவும் மாறி மாறி வருவது தமாஷாக இருக்கிறது.

அந்த ஆரம்பக் காட்சியில், அடர்ந்த காட்டுப் பகுதியில் அந்நிய ஊடுருவலர்களை அர்ஜுன் ஓடிப் பிடித்து அழிக்கிறாரே, அது ரத்தம் உறைய வைக்கிற விதம். (கேமரா யாரோ ஷிவாவாம்! ரொம்ப ஷிரமப்பட்டிருக்கிறார்.)

அந்தக் காட்சி முடிந்த கையோடு ஒரு கனவுப் பாடலுக்கு மோனிகாபேடி ஆட, ஃப்ளாஷ் பேக்கில் 'ஏன் அர்ஜுன் மிலிட்டரியில் சேர்ந்தார்?' என்பதற்கான விளக்கம் சொல்லப்படுகிறது. அங்கே உதயகுமார் வந்து விடுகிறார்.

ஒரு விஷயத்துக்காக உதயகுமாரைப் பாராட்ட வேண்டும். மசாலா படம்தானே என்று காட்சிகளை ஓட ஓட விரட்டாமல், ஒவ்வொன்றுக்கும் உரிய நேரம் கொடுத்து, அதே சமயம் போரடிக்காமல் ஸ்கிரிப்ட் எழுதியிருக்கிறார்.

உதாரணத்துக்கு, அண்ணன் ஓர் அயோக்கியன் என்று தெரிந்து கொண்டபின் அர்ஜுன் வீட்டுக்கு வந்து அண்ணியை எதிர்கொள்கிற காட்சி. கூடியமட்டும் அங்கே வசனங்களைக் குறைத்து, பின்னணி இசையால் இட்டு நிரப்பியிருக்கிறவிதம் ரசிக்கும்படி உள்ளது.

நீண்ட நாட்களுக்குப் பிறகு தலைகாட்டியிருக்கிற ஜெய்சங்கர் பாத்திரம் ஓர் அழகான ஒரு பக்க சிறுகதைக்கான விஷயம். எதிர்பாராத விதமாக அவர் தன்னைத்தானே சுட்டுக் கொண்டு இறப்பது அதிர்ச்சியூட்ட வேண்டும் என்பதற்காகத் திணிக்கப்பட்டிருப்பதாகப்படுகிறதென்றாலும் தியேட்டரில் நிறையப் பேர் உச்சுக் கொட்டுகிறார்கள்.

'இனிய அறிமுக'மாக வந்திருக்கும் மோனிகாபேடி சிரிப்பது போல் அழுகிறார். அழுவது போல் சிரிக்கிறார். வெண்ணெய் போல் இருக்கிறார் என்பது தவிர வேறு விசேஷமில்லை.

படத்தில் பிரசாரமாக, போதனையாக, வியாபார உத்தியாக இல்லாமல் 'தேசபக்தி' என்கிற விஷயம் அதன் இயல்பான புனிதத்துவத்துடன் அணுகப்பட்டிருப்பதைப் பாராட்ட வேண்டும்.

இதற்காக மட்டுமே கொஞ்சம் போல், ஆங்காங்கே தெரிகிற ஓட்டைகளை மன்னித்து விடத் தோன்றுகிறது.

— ஆர்.பி.ஆர்.

அரசியல் பொம்மலாட்டம்



1996 அக்டோபர் 6
தாது புரட்டாசி 20
மலர் : 55
இதழ் : 10

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ராவ் நடத்திய ராஜினாமா நாடகம்!

**வே**று வழியின்றி நரசிம்மராவ், காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருந்து ராஜினாமா செய்திருக்கிறார்.

அவர் பேரில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப் போதுமான ஆதாரங்கள் இருப்பதாக மாஜிஸ்திரேட் நீதிமன்றத் தீர்ப்பு. இந்தத் தீர்ப்பை ஏற்காமல் ராவ் மேல் முறையீடுகள் செய்தார். உச்சநீதி மன்றம் வரை போனார். நாட்டின் தலைமை நீதிமன்றமும் அவர் முறையீட்டை ஏற்றது. மீண்டும் மாஜிஸ்திரேட் நீதிமன்றத்தில், வேறு நீதிபதி அவ்வழக்கை விசாரிக்க வேண்டும் என்று உத்தரவிட்டது. மறு விசாரணையிலும் ராவ் பேரில் குற்றப் பத்திரிகை பதிவுசெய்யப் போதுமான ஆதாரங்கள் இருப்பது உறுதிப்படுத்தப்பட்டது!

உலகின் மிகப் பெரிய ஜனநாயக அமைப்பு நம் நாடு. அதன் தலைவராக இருந்த ஒருவருக்குத் தவறியும் அநீதி இழைக்கப்பட்டு விடக் கூடாது என்பதில் நீதித்துறை மிகவும் கவனமாக இருந்திருக்கிறது.

கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கைப்படி நரசிம்மராவின் கடந்த ஆட்சிதான் சுதந்தர இந்தியாவின் மிக மோசமான ஆட்சி. 'ஐம்பதாயிரம் கோடி மதிப்புக்கு ஊழல் நடந்த ஆட்சி; ஊழல் குற்றச்சாட்டின் பேரில் பதினைந்து அமைச்சர்கள் ராஜினாமா செய்த ஆட்சி...' என்கிறது கம்யூனிஸ்ட் கட்சி. அந்தப் பதினைந்து அமைச்சர்களையும் பிரதமர் ராவ் பாதுகாக்க முயன்று தோற்றிருக்கிறார். தம் பேரிலேயே இருந்த குற்றச்சாட்டுகள் குறித்து எள்ளளவும் கவலைப்படாமல் பதவியில் தொடர்ந்




திருக்கிறார். பின்னர், தேர்தல் நடந்து, பிரதமர் பதவி போன பிறகு, கட்சிக்குள்ளேயே பலர் அவர் ராஜினாமாவைக் கோரியிருக்கிறார்கள். கல்லுப் பிள்ளையாராக நீடித்திருக்கிறார் ராவ்.

இப்போது, மறுவிசாரணையில், கிரிமினல் குற்றத்துக்கு அவர் துணைபோனதற்கான சாட்சியங்கள் கிடைத்துள்ளன என்பது உறுதியான நிலையில், கட்சித் தலைமையிலிருந்து மட்டும் விலகியிருக்கிறார். காங்கிரஸ் பாராளுமன்றக் கட்சிக் குழுத் தலைவராகத் தொடர்ந்து நீடிக்கிறார்!

இத்தனைக்கும் பிறகு, 'சிறந்த ஜனநாயக மரபுகளைக் காத்திருக்கிறார் ராவ்' என்று சில காங்கிரஸ் தலைவர்கள் ஜால்ரா அடிப்பது சிரிப்பைத்தான் வரவழைக்கிறது.

நரசிம்மராவின் இந்தத் தாமதமான ராஜினாமா, அத்வானிக்குக் கொஞ்சம் தர்மசங்கடம் ஏற்படுத்தியதற்கு மேலாக எதையும் சாதிக்கவில்லை. குற்றம்சாட்டப் பெற்ற அத்வானி, தமது எம்.பி. பதவியை உதறினாலும் கட்சித் தலைமையில் நீடித்து வருகிறார். அவரும் ராஜினாமா செய்ய வேண்டும் என்று இனி காங்கிரஸ்காரர்கள் 'தார்மிக' பலத்துடன் கோஷம் போடலாம்.

ராவ் ராஜினாமா செய்துவிட்ட பின்னர், அடுத்த தலைவரை, அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர்கள் ஒன்றுகூடி தேர்ந்தெடுக்கவில்லை. கட்சி செயற்குழு உறுப்பினர்கள் மட்டுமே கூடி சீதாராம் கேசரியைத் தலைவராக்கியிருக்கிறார்கள்.

1971 பாராளுமன்றத் தேர்தலில் நின்று தோற்றவர் கேசரி. அப்போது வீசிய இந்திரா அலை தமது தொகுதி வரை எட்டவில்லை என்று அதற்குக் காரணம் சொன்னவர்! அவருக்கு ராஜ்யசபா உறுப்பினர் பதவியும் கட்சியின் தாற்காலிக பொருளாளர் பொறுப்பும் தந்தார் இந்திரா. நாளடைவில் 'தாற்காலிக' என்பது மறைந்து விட்டது. பொருளாளர் கேசரி, காங்கிரஸ் கட்சியின் எல்லாவிதமான 'வருமானங்'களையும் அவற்றின் பின்னணியையும் அறிந்தவர். ராவின் ஆசிகளுடன் இப் பொறுப்புக்கு வரும் இவர், அவருடைய எடுப்பார் கைப் பிள்ளையாகத் தொடருவார் என்றே கருத வேண்டியிருக்கிறது.

காங்கிரஸ் உட்கட்சித் தேர்தல்களை நடத்தவிருந்த நேரத்தில், இப்படித் தலைமை மாற்றம்




நிகழ்ந்திருப்பதைச் சுட்டிக்காட்டி, தேர்தல் கமிஷனுக்குக் கடிதம் போயிருக்கிறது. உட்கட்சித் தேர்தல்களை ஒத்திவைக்க அனுமதி கோரப்பட்டிருக்கிறது!

ராவ் பேரிலான வழக்கில் நீதிபதி மாறியும், தீர்ப்பு மாறவில்லை... காங்கிரஸ் கட்சியிலும் தலைமைதான் மாறியிருக்கிறதேயொழிய, கட்சியின் போக்கு மாறி அது தூய்மையடைந்துவிடப் போவதில்லை!

## பட்டப்பகல் சாகசம்!

ஆசைத்தம்பி ரவுடி கும்பலைச் சேர்ந்த மேலும் இருவரை சென்னை போலீஸார் வீழ்த்தி விட்டனர்.

தொழிலதிபர் ஒருவரை பிளாக்மெயில் செய்ய முயன்ற கபிலன் மற்றும் அவனது உதவியாளரைத் திட்டமிட்டு, சாமர்த்தியமாகக் கைப்பற்ற முயன்றனர். அந்த முயற்சியின் போது கபிலன் சரமாரியாகத் துப்பாக்கியால் சுட, போலீஸ் தற்காப்புக்காகத் திருப்பிச் சுட நேர்ந்திருக்கிறது.

கபிலனை உயிருடன் கைப்பற்ற முடியாமல் போனது ஏமாற்றமெனில், வழிப்போக்கர் ஒருவர் எச்சரிக்கையை மீறி அத்தெருவழியே சென்றதால் குண்டடிப்பட்டு இறந்தது சோகம்!

காவல் துறை உயர் அதிகாரிகளும், கபிலன் வேட்டைக்கெனத் தயார்படுத்தப்பட்ட பதினேழு பேர் அடங்கிய சிறப்புக் குழுவும் நிச்சயம் பாராட்டுக்குரியவர்கள்தான். அவர்கள் விருதுகள் பெறுவார்கள் என்பதிலும் சந்தேகமில்லை. ஆனால், தம் உயிருக்கும் அஞ்சாமல் காவல் துறையினருக்கு உதவிய தொழிலதிபர் ஷாஜிக்குத்தான் சிறப்பு விருது தரப்பட வேண்டும்.

தம்மிடம் கபிலன் ஐந்து லட்சம் ரூபாய் கேட்டு மிரட்டியதை அவர் ரகசியமாகக் காவல் துறைக்குத் தெரிவிக்க முன்வந்தது துணிவான செயல். அவர் ஒத்துழைப்புத் தந்ததால்தான் இந்தப் பட்டப்பகல் சாகசம் சாத்தியமாகியிருக்கிறது!

# கிண்டி ஸ்டேஷனுக்கு

அன்று ரயிலேற வந்த பயணிகளெல்லாம் மூக்கின் மேல் விரலை வைத்து ஆச்சரியப்பட்டார்கள். ரயில் ஓடுகிறதா, இல்லையா என்று கூட பலர் சந்தேகத்தோடு கேட்டார்கள். அந்த அளவுக்கு ஸ்டேஷனுக்குச் செல்கிற வழியிலுள்ள கடைகளெல்லாம் அகற்றப்பட்டு, பளிச்சென்று இருந்தது. நமக்கோ, ரயில்வே மேலதிகாரியுடன் நாம் வருகிற அதிரடி விசிட் பற்றிய விஷயம் எப்படி வெளியில் தெரிந்தது என்கிற ஆச்சரியம்...



• வெறிச்சோடிக் கிடக்கும் நடைபாதை

கிண்டி மெயின் ரோடிலிருந்து. ரயில்வே ஸ்டேஷனுக்குள் செல்வதென்றால், எப்படிச் செல்ல வேண்டும்?

இதிலென்ன சந்தேகம்? கொத்தவால் சாவடிக்குள் புகுந்துதான் போக வேண்டும்!

கிண்டி ரயில்வே ஸ்டேஷனுக்கும் கொத்தவால்சாவடிக்கும் என்னய்யா சம்பந்தம் என்று யாரும் தலையைப் பிய்த்துக் கொள்ள வேண்டாம். இதுதான் நிஜம்!

தக்காளிப் பழக் கடைகள்; வெண்டைக்காய், கத்திரிக்காய் கடைகள், கீரை வகைக் கடைகள், பழக்கடைகள். பெல்ட் கடைகள் இதற்கிடையில் ரேஸ் புத்தகம் விற்பவர்கள் என்று ஏராளக் கடைகள். எங்கே? கிண்டி ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற நடைபாதையில்தான்.

இத்தனையையும் தாண்டித்தான் நடைபாதையைக் கடந்து ரயில்வே ஸ்டேஷன் ஓவர் பிரிட்ஜுக்குச் செல்ல வேண்டும். ஓவர் பிரிஜ்ஜிலும் அத்தனை சுலபமாக அடியெடுத்து நடந்து விட முடியாது. பூக்கடைகள், கறி-காய்க் கடைகள், பழக்கடைகள் மற்றும் ஊறுகாய், சீடை – முறுக்குக் கடைகள் என்று இத்தனைக்கும் நடுவில்தான் கிடைக்கிற ஒத்தையடிப் பாதை மூலமாக ஓவர் பிரிட்ஜிலும் ஏறி இறங்க வேண்டும்!

அதுவும் எத்தனை பேர்? ஒரு நாளைக்குப் பல்லாயிரக்கணக்கானவர்கள் வந்து போகும் ரயில்வே ஸ்டேஷன் அது. அதுவும் ஸ்டேஷ

• நமது விசிட்டைத் தெரிந்து கொண்டு கடைகளை அப்புறப்படுத்திய ரயில்வே போலீஸார்....



# ஓர் அதிரடி விசிட்!

**களத்தில் கல்கி :**

னுக்கு மறுபுறம் இருக்கிற ரேஸ் கோர்ஸில் பந்தயம் நடக்கிற நாள் என்றால் மகாமகக் கூட்டம்தான்!

குறிப்பாகக் கடந்த 30.8.96, அன்று ஜெ - சசி கலந்து கொண்ட மகாமகம் போலவே ஆகிவிடும் போல் இருந்தது. அப்படியொரு நெரிசல். இருபுறமும் இருக்கிற காய்கறி, பழக்கடைகளுக்கு நடுவில் ஆயிரக்கணக்கானவர்கள் செல்ல வேண்டியிருந்ததால் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. அந்தச் சமயம் ஓவர் பிரிட்ஜைக் கடந்து போவதற்கே சுமார் இருபது நிமிடங்களானது. நல்லவேளையாக அன்று அசம்பாவிதம் ஏதும் நடக்கவில்லை!

• அழுகிப் போன பழக்கூடைகளைப் போட்டு, போகும் வழியை நாறடிக்கிறார்கள்...



இதற்கு ரயில்வே நிர்வாகம் ஏதாவது செய்ய வேண்டாமா? ரயில்வே இடத்தில் எப்படி அவர்கள் அனுமதியில்லாமல் இத்தனை கடைகளைப் போட்டு மக்களுக்கு இடைஞ்சல் செய்கிறார்கள்? சம்பந்தப்பட்ட ரயில்வே மேலதிகாரி ஒருவரை அதிரடி விசிட்டாக





மத்தாய் : புகார்ப் புத்தகத்தைப் பார்வையிடுகிறார்...

அழைத்து வந்து காட்டினால் என்ன?

நமது எண்ணத்தைத் தென்னக ரயில்வேயின் தலைமை மக்கள் தொடர்பு அதிகாரி ஸ்ரீதரிடம் கூறினோம். "நல்ல விஷயம்தான். நான் டி.சி.எம் (டிவிஷனல் கமர்ஷியல் மானேஜர்)மிடம் பேசுகிறேன். அவரை ஒருநாள் அழைத்துக் கொண்டு போய்க் காட்டுங்களேன்!" என்றார்.

அதன்படி கடந்த 27.9.96 அன்று டி.சி.எம். மத்தாயை அழைத்துக் கொண்டு வந்தோம். "நான் மாத்திரம் வந்தால் போதாது; அனுமதியில்லாத கடைகளை அப்புறப்படுத்த வேண்டுமென்றால் ரயில்வே போலீஸ் வர வேண்டும். எனவே அவர்களுக்குத் தகவல் சொல்லி அங்கே வரச் சொல்லி விடுகிறேன்!" என்று சொல்லி விட்டு நம்மோடு வந்தார்.



• ஓவர் பிரிட்ஜ் : அன்று பிச்சைக் காரர்களைக் கூட விரட்டியடித்தார்கள்...

நாங்கள் கிண்டி ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தபோது, மாலை சுமார் நான்கரை மணி. வந்து பார்த்த எங்களுக்கு ஒரே அதிர்ச்சி! காரணம் அங்கே ஒரு கடையும் இல்லை! அத்தனையும் மாயமாய் மறைந்து போய் விட்டிருந்தன.

"நாங்கள் உங்களை அழைத்து வருவதற்காக உங்கள் அலுவலகம் வர மதியம் இரண்டே கால் மணிக்கு கிண்டியிலிருந்துதான் ரயில் ஏறினோம். அப்போது கூட அத்தனை கடைகளும் இருந்தன!" என்றோம் மத்தாயிடம்.

"நானும் நாம் வருகிற விஷயத்தை வேறு யாரிடமும் சொல்லவில்லை. ரயில்வே போலீஸிடம் வெறுமனே இங்கு வரச் சொன்னேன். அவ்வளவுதான். இத்தனை குறுகிய காலத்துக்குள் எப்படி இந்த இடமெல்லாம் இத்தனை பளிச்சென்று இருக்கிறதென்று எனக்கும் தெரியவில்லை!" என்றார் மத்தாய்.

இதற்குள் சல்யூட் அடித்தபடி வந்து நின்றார் ஏ.தாமஸ். ரயில்வே போலீஸின் உதவி சப்-இன்ஸ்பெக்டர். கூடவே ஐந்தாறு கான்ஸ்டபிள்கள்.

"இவர்கள் கல்கி பத்திரிகையாளர்கள். இவர்கள் சொல்வதெல்லாம் உண்மைதானா?" அவரிடம் கேட்டார் மத்தாய்.

"ஆமாம் சார். நாங்களும் அவ்வப்போது பிடித்து கேஸ் போட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். ஐம்பது ரூபாய் அபராதம் போடுகிறார்கள். பிறகு மறுபடியும் வந்து கடை போட்டு விடுகிறார்கள். இது தொடர்ச்சியாக நடந்து கொண்டேயிருக்கிறது!" என்றார் அவர்.

"இதோ பாருங்கள் வெண்டைக்காய் மூட்டை ஒன்று. நாம் வருவதையறிந்து அவசர அவசரமாகக் கடைகளைக் காலி செய்து விட்டுச் சென்றபோது, அவசரத்தில் இதை விட்டு விட்டுச் சென்றிருக்கிறார்கள்!" என்றோம் நாம்.

"ஆமாம். நிஜம்தான். இப்போது கடைகள் இல்லையென்றாலும் கடைகள் இருந்ததற்கான அறிகுறிகள் இருக்கின்றன. இதோ இங்கே பூவிதழ்கள் சிதறிக் கிடக்கின்றன. இங்கேயிருந்த பூக்கடையும் அவசரமாகக் காலி செய்யப் பட்டிருக்கிறது!" என்றார் மத்தாய்.

சுற்றிப் பார்த்தோம். அழுகிப் போன கொய்யாப் பழங்களெல்லாம் ஓரிடத்தில் குப்பையாகக் கொட்டி வைக்கப்பட்டிருந்தன. நாங்கள் சுற்றிப் பார்த்தபோது, பிச்சைக்காரர்களைக் கூட விரட்டியடித்தார்கள் ரயில்வே கான்ஸ்டபிள்கள்!

எந்தெந்த இடத்தில் என்னென்ன கடைகள் வழக்கமாக இருக்கும் என்பதையும் ரயிலேற வருகிற பயணிகள் எப்படியெல்லாம் சிரமப் பட்டு நடக்க வேண்டும் என்பதையும் மத்தாய்க்கு விளக்கிச் சொன்னோம்.

"இனி கடைகள் வராமல் பார்த்துக் கொள்கிறோம் சார்!" என்றார் ரயில்வே உதவி சப்-இன்ஸ்பெக்டர் தாமஸ்.

இறுதியாக ஸ்டேஷன் மாஸ்டர் அறைக்குச் சென்றோம். ஸ்டேஷன் மாஸ்டர் ரமேஷிடம், "உங்களுக்கு ரயில் போக்குவரத்தைக் கவனிக்கவே நேரம் சரியாக இருக்கும். என்றாலும் ஸ்டேஷன் அவ்வளவு சுத்தமாக இல்லை!" என்றார் மத்தாய்.

"ரயில்வே ஊழியர்கள் தினமும் இரண்டு தடவை சுத்தம் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள்!" என்றார் ரமேஷ்.

"வழக்கமாக எப்படியோ, இன்று குப்பைகள் அதிகம்தான்!" என்ற மத்தாய், "புகார்ப் புத்தகத்தைக் கொடுங்கள்!" என்றார்.

புகார்ப் புத்தகத்தை வாங்கிப் பார்த்தபோது, 19.6.96 அன்று சாமுவேல் என்பவரும் 30.8.96 அன்று தாமோதரன் என்பவரோடு மேலும் பத்தொன்பது பேரும் கையெழுத்திட, புகார்கள் பதிவாகியிருந்தன.

எல்லாமே இந்தக் காய்கறி மற்றும் பழக் கடைகள் காரணமாகப் பொதுமக்கள் எத்தனை சிரமப்பட்டு நடக்க வேண்டியிருக்கிறது என்பது பற்றிய புகார்கள்தான்!

"இந்தப் புகார்களுக்கு என்ன நடவடிக்கை

## ஜாலி போட்டி – 10

# பரிசு ரூ. 5000!

இந்த இதழில் வெளியாகியுள்ள ஆறு ஜோக்குகளுக்கான கார்ட்டூன் படங்கள் மாறி மாறி வந்துள்ளன. அவை எந்தெந்த ஜோக்குகள்? அந்த ஆறு ஜோக்குகளின் முதல் இரண்டு வார்த்தைகளை மட்டும் கீழுள்ள கூப்பனில் எழுதியனுப்புங்கள்.

சரியான விடைகளை எழுதுபவருக்கு பரிசு ரூ. 5000/-

சரியான விடையைப் பலர் எழுதினாலும் குலுக்கல் முறையில் ஒருவருக்கே மொத்தப் பரிசும்!

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**முடிவு தேதி : 14.10.96**

**ஜாலி போட்டி - 10**

1. ............................................................
2. ............................................................
3. ............................................................
4. ............................................................
5. ............................................................
6. ............................................................

பெயர் : ............................................................

முகவரி : ............................................................

............................................................

............................................................

எடுக்கப்பட்டிருக்கிறது?"

"அவ்வப்போது பிடித்து கேஸ் போட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்!"

"அப்படியுமா இப்படி..." என்ற மத்தாய், அந்தப் புகார் பற்றிய விவரங்களைக் குறித்துக் கொண்டு "வந்ததுதான் வந்தோம், வாருங்கள், ரயில்வே சிற்றுண்டிச் சாலை (V.L.R.) யையும் பார்த்து விட்டுச் செல்லலாம்!" என்றார்.

பார்த்தோம்.

"லைசென்ஸ்தாரர் யார்? விவரங்களைக் கொடுங்கள்!" என்று வாங்கிப் பார்த்தவர், "ஏன் ஒருவர் கூட யூனிஃபார்மில் இல்லை?" என்று கேட்க, இரண்டொரு ஊழியர்கள் அவசர அவசரமாக யூனிஃபார்மை எடுத்துப் போட்டுக் கொள்ள ஆரம்பித்தனர்.

பிறகு, அங்கீகரிக்கப்பட்ட சிற்றுண்டிகள் தான் விற்கப்படுகின்றனவா, சுகாதாரமாக இருக்கின்றனவா என்றெல்லாம் சரிபார்த்தார் மத்தாய்.

கடைசியாக விடைபெறுகிறபோது, "நான் இங்கே மாற்றலாகி வந்து இரண்டு மாதங்கள் தான் ஆகிறது. எனவே, எங்கெங்கெல்லாம் இப்படிக் கடைகள் போட்டு, ரயிலேற வருகிற பயணிகளுக்கு இடைஞ்சல் செய்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. கிண்டியில் இப்படியிருப்பதை இன்றுதான் நானும் பார்த்தேன். விஷயத்தை இதோடு நான் விட்டு விட மாட்டேன். இன்னொரு நாள் யாருக்குமே சொல்லாமல் நான் மட்டுமே வந்து பார்க்கிறேன். நடவடிக்கை எடுக்கிறேன். ஏனெனில் ரயில் பயணிகளுக்கு வசதிகள் செய்து கொடுப்பதென்பது ரயில்வேயின் கடமை!" என்றார் மத்தாய்.

**கடைசி செய்தி** : நாம் விசிட் செய்ததற்கு மறுநாள் காலையிலேயே பழையபடி நடைபாதைக் கடைகளெல்லாம் வந்து விட்டன! "காரணம் என்ன தெரியுமா? ரயில்வேயுக்கும் சம்பந்தப்பட்ட நடைபாதைக் கடைக்காரர் களுக்கும் இடையில் இருக்கிற பிரிக்க முடியாத 'சம்திங்' சமாசாரம்தான்!" என்கிறார்கள் பொது மக்கள்.

இதற்கு ரயில்வே சொல்லுகிற நிஜமான பதில் என்பது 27.9.96 அன்று மாலை எப்படி நடைபாதைக் கடைகள் இல்லாமல் கிண்டி ஸ்டேஷன் இருந்ததோ, அப்படியே எல்லா நாட்களும் இருக்குமாறு பார்த்துக் கொள்வது மட்டும்தான்.

— **இளங்கோவன்**

படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

# கல்கி

3.11.96

தீபாவளி
சிறப்பிதழில்

பிரபஞ்சன்

எழுதும்

# பூக்கள் நாளையும் மலரும்!

உங்களைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளே
தொடர்கதையாக ஆரம்பமாகிறது!



# என்னைத் திருமணம் செய்து கொள்வீர்களா?

3.09.1966

ஓவியர் திலகமாக விளங்கும் அன்புள்ள திரு. ஜெயராஜ் அவர்களுக்கு,

நான் முன்பு எழுதிய இரண்டு கடிதங்களுக்கும் தாங்கள் எழுதிய பதில் கடிதங்கள் கிடைத்தன. 'ரசிகர்கள் கடிதத்திற்கு நான் தவறாமல் (தாமதமானாலும்) பதில் எழுதி விடுவேன்' என்று எழுதியிருந்தீர்கள். தங்களின் ரசிகர்கள் மீது தாங்கள் வைத்திருக்கும் அன்பை அது காட்டுகிறது. உங்கள் ஓவியங்களை நான் தொடர்ந்து எல்லா சஞ்சிகைகளிலும் பார்த்து - ரசித்து - மகிழ்ந்து வருகிறேன். ஆனந்தவிகடன் வாராந்தரியில் சிவசங்கரி அவர்களின் 'என்றும் உங்கள்' என்ற தொடர் நாவலுக்கும், குமுதம் இதழில் பி.வி.ஆர். எழுதிய 'சந்தைப் பேட்டை' தொடர்கதைக்கும் தாங்கள் கீறிய ஓவியங்கள், ஆங்கிலத்தில் 'இன்க்ரெடிபிள்' என்று சொல்வது போல் புகழ்ச்சிக்கும் அப்பாற்பட்டது. அந்த ஓவியங்களில் பிரகாசிக்கும் கற்பனை வளம், பின்னணியிலுள்ள செழுமை, ஒரு கதாபாத்திரத்துக்கும் இன்னொன்றுக்கும் இடையே உள்ள தெளிவான வித்தியாசம், பாத்திரங்களின் உணர்ச்சிபாவம் ஆகியவை என்னை மிகவும் கவர்ந்தன.

தங்களிடம் ஒரு முக்கியமான சங்கதியைச் சொல்ல அனுமதிப்பீர்களா? தாங்கள் என்னை திருமணம் செய்து கொள்வீர்களா? தங்களுடைய சம்மதத்தையோ அல்லது அபிப்ராயபேதத்தையோ தயக்கமில்லாமல் எனக்கு எழுதுங்கள். அல்லது இதுபற்றி உங்கள் பொதுவான கருத்து என்னவென்பதை எழுதுங்கள். என் அடுத்த கடிதத்தில் என் புகைப்பட நகல் ஒன்றை அஞ்சல் செய்கிறேன்.

அப்படித் தாங்கள் சம்மதித்தால், நம் திருமணத்திற்குப் பிறகு என் அப்பாவிடம் சொல்லி, ஒரு ஓவியப் பள்ளி அமைத்து, அதை நாம் இருவரும் சேர்ந்து நடத்தலாம் என்று முடிவு செய்திருக்கிறேன். எங்கள் நாட்டில் ஓவியப் பள்ளிக்கு நல்ல வரவேற்பு உண்டென்பது எனக்கு நன்றாகத் தெரியும். தாங்கள் நன்கு சிந்தித்து முடிவு செய்து பதில் கடிதம் எழுதுங்கள்.

எங்கள் நாட்டில் நான் இப்படி யாரையாவது மணக்க விரும்பினால், அவரையே கேட்டுவிடுவது வழக்கம்தான் - முறையும் கூடத்தான்.

தங்களுடைய பதில் கடிதத்தை இன்முகத்துடன் வரவேற்கக் காத்திருக்கிறேன்.

என்றும் தங்கள்,

தாமரைச் செல்வி



## வி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள் : ஓவியர் ஜெயராஜ்

"இந்தக் கடிதத்தை நானும் என் மனைவி ரெஜினாவும் சேர்ந்துதான் படித்தோம். அப்போது எங்கள் மகள் ஹில்டாவுக்கு வயது இரண்டு. மகன் டிஸ்னி அப்போதுதான் பிறந்திருந்தான். (இப்போது ஹில்டா தன் கணவர் மற்றும் குழந்தைகளுடன் ஆஸ்திரேலியாவில் இருக்கிறாள். டிஸ்னி சென்னையில் விளம்பரக் கம்பெனி நடத்துகிறான்).

திடீரென்று 'என்னை மணப்பீர்களா?' என்று அந்தப் பெண் கேட்டிருந்தது எனக்குப் பெரிய அதிர்ச்சியைத் தரவில்லை. காரணம் அந்தப் பெண் வசிக்கும் நாட்டில் (பெயர் வேண்டாமே) இது சகஜம்.

ஆனால் எனக்குத் திருமணம் ஆகியிருக்கக்கூடும் என்ற சந்தேகம் கூட அந்த ரசிகைக்கு ஏன் வரவில்லை என்பது வியப்புதான். ஒரு வேளை மிகவும் இளமை ததும்பும் ஓவியங்களை வரைபவர் திருமணம் ஆகாத இளைஞனாகத்தான் இருக்க முடியும் என்று முடிவெடுத்து விட்டாரோ என்னவோ!

திருமணத்துக்கு முன் ரெஜினா கூட எனக்கு எந்தக் கடிதமும் எழுதியதில்லை! பெரியவர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணம்தான் எங்களுடையது என்றாலும் நிச்சயதார்த்தத்திற்கும், திருமணத்துக்கும் இடையே சுமார் எட்டு மாத இடைவெளி. அவளுடைய அப்பாவுக்குத்தான் நான் லெட்டர் எழுதுவேன். 'அன்புள்ள வருங்கால மாமனார் அவர்களுக்கு' என்று தொடங்கி நடுவில் 'ரெஜினா அவர்களை மிகவும் கேட்டதாகச் சொல்லுங்கள்' என்று சந்தடி சாக்கில் சேர்த்துக் கொள்வேன். அவளும் தன் தந்தை மூலமாகத்தான் என்னை விசாரிப்பாள்.

இதையெல்லாம் நினைவில் கொண்டு சிரித்துக் கொண்டே நானும் ரெஜினாவும், இந்த அன்பு ரசிகையின் மனத்தை நோகச் செய்யாமல் நாசூக்கான நகைச்சுவையோடு பதில் சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தோம்.

'தாங்கள் என்னைக் கேட்ட முக்கிய கேள்விக்கு நான் என் மனைவியைக் கேட்டுவிட்டுப் பதில் சொல்கிறேன். ஏனென்றால் எதிலும் அவள் ஆலோசனையைக் கேட்டு நடப்பதுதான் என் வழக்கம்' என்று பதில் அளித்தேன்.

தொகுப்பு : அருண் சரண்யா

புறங்கையைக் கட்டியபடி பட்டாளைக்கும் ரெண்டாங்கட்டுக்குமாக கதிரேசன் செட்டியார் நடை பழகினார். கண்கள் நொடிக்கொரு தரம் வாசலைப் பார்த்தன. அடர்ந்திருந்த பவளமல்லிக் கொடிகளையும் தாண்டி, வெயில் கண்ணைக் கூசியது.

தபால்காரன் வரும் நேரம்தான்.

"லச்சுமி... ஏ லச்சுமி..." ஆச்சியை உள்பக்கம் பார்த்து இரைந்தார். ஆச்சி மூணாங்கட்டிலோ, கொல்லைப் பக்கமோ இருப்பார். எப்படிக் கேட்கும்? வீடுதான் நானூற்றம்பது அடி நீளமாயிற்றே! பட்டாள அறைக்குள் சென்று 'பெல்'லை அமுக்கினார். உள்ளே அடுப்படியில் இருந்த ஆச்சி, சத்தம் கேட்டு, பதறிக் கொண்டு ஓடி வந்தார்.

"நாம எழுதி எத்தனை நா இருக்கும்?"

"எதைக் கேக்குறீக?"

"உன்னையப் போய்க் கேட்டேன் பாரு!... அதேன்... உன் மகன் கல்யாணங்கேட்டு எழுதினானே... இங்கிலீசுக்காரன்... அவனுக்கு பதில்..."



# வெளிநாட்டு சம்பந்தி

"நீங்கதானே எழுதினீக... போன வெள்ளிக்கு மொத வெள்ளி. பதிமூணு நாளாச்சு... ஏங்கேக்குறீக?"

"அவன் பதிலெழுதுறானோ, இல்லை... பேசாம கல்யாணத்தை சர்க்கல முடிச்சுப்பிடுறானோ...? ராமா! ராமா!! நம்ம கண்ணால இந்த கண்றாவியெல்லாம் பாக்க வேணுமின்னிருக்கு. எப்படிப்பட்ட குடும்பம்...! எங்கப் பச்சி... எப்படிப்பட்டவுக! எல்லோரும் ராமனா வாழ்ந்தவுக. நம்ம குடும்பத்துலயா இப்படி...? வேலைக்கு போனவங்கயெல்லாமா இப்படி வெள்ளைக்காரியைக் கூட்டியாராங்க...? உம் மகனைப் போலயா...! எல்லாம் எந்தலையெழுத்து...?"

"அவன் கல்யாணங் கட்டுறான்... இல்ல நாசமாய்ப் போறான்... நீங்க சுத்தி, கவலைப் பட்டு 'பிரசர்' ஏறிடப் போவுது... விடுங்க காப்பி வேணாப் போட்டாரவா?"

"அதெப்படி... அளகுபெத்த ஆம்பிளைப் பிள்ளை... நாட்டரசங்கோட்டை பழனியப்ப செட்டியார் நேர் வாரிசு... ஊருக்கு முத டாக்டரேட்... பி.எல்.எம்.எஸ்டேட்டுக்கு முதலாளி, விட்டிருவனா...? வரட்டும் பதில். பார்த்தர்றேன். எழுதிக் கேட்டான் பாரு... என்னையக் கேனைப்பயன்னு நெனைச்சுக்கிட்டு...! 'உன்மகன் எம்மகளை விரும்புறான்... கட்டிக்கக் கேக்குறான்... உனக்குச் சம்மதமா'ன்னு... நடிக்கிறானா...?" அவருடைய முகம் சிவந்து போனது. மூச்சு வாங்கியது.

"அடி ஆத்தி! இப்படி மூச்சு வாங்குதே...! நீங்க ஏன்தா... இப்படி கவலைப்படுறீக...? நல்லாத்தேன் பெத்தோம், வளத்தோம்...



அரியக்குடி பெருமாள் நம்மள கை விட்டுற மாட்டார்...! நம்ம ஐயாக்க செஞ்ச புண்ணியந்தான். ஒவ்வொருத்தர் மாதிரி இல்லாம, பெத்தவுக நம்ம, சம்மதம் கேட்டு வெள்ளைக்காரன் எழுதினான்... நீங்களும் என்னமா ஒரு கேள்வி கேட்டு பதில் எழுதினீக...? அதப் படிச்சவன் மான, ரோசம் இருந்தா நமக்கு சம்மதமில்லாத இந்த கல்யாணத்தைப் பண்ணுவானா...?''

சாய்மானக் குறிச்சியை விரித்துப் போட்டார் லட்சுமி ஆச்சி... ஃபேனையும் சுழலவிட்டு வெள்ளித் தம்ளரில் தண்ணீர் கொடுக்க, கதிரேசனுக்குத் தேவலாம் இருந்தது.

'வாஸ்தவம்தான் அவுக தபால் வந்த உடனே தாமதிக்காம நறுக்குனு ஒரு தபால் போட்டது, அவுக மனதை மாற்றியிருக்கனும்...' இன்னைக்குத் தபால்காரன் வந்தா விஷயம் தெரிஞ்சிடும்...'

"லட்சுமி... உன்ன கண்ணாடிப் பீரோல்ல... மேல் தட்டுல நான் எழுதின தபால் காப்பி வச்சிருக்கேன். அதையும் மூக்குக் கண்ணாடியையும் சித்த கொண்டா... இந்த தபால்காரனை இன்னுங் காணமே?"

ராமய்யா மகன் பேங்க் மானே ஜரை விட்டு எழுதலாம் என்று காத்திருந்து, அவன் வராது போக, இருப்புக் கொள்ளாமல் அவரே ஆங்கிலத்தில் உடன் பதில் எழுதிப் போட்டுவிட்டார். லட்சுமி கொண்டு வந்த அந்த தபாலின் நகலினை மீண்டும் படித்தார். அந்தத் தபாலின் நடுப்பாகம்தான்... அம்பு போல் குத்தியிருக்க வேண்டும். மீண்டும் அதை ஒருமுறை படித்தார்.

'நாங்கள் எல்லாம் பரம்பரை பரம்பரையாய் குடும்பமாய் வாழ்பவர்கள். சாமி நம்பிக்கை உள்ளவர்கள். எங்களுக்கு இல்லறம்தான் வாழ்க்கை முறை. வாழ்வில் ஒருமுறைதான் திருமணம். அது ஒரு விளையாட்டல்ல. மணந்தவரை விலக்கி விட்டு, வேறொருவரை செய்து கொள்வது கிடையாது. பந்தம், பாசம், குடும்பம்... திருமணம்.. என்று பழம் பஞ்சாங்கமாய்...

'....டாக்டர் கே. பழனியப்பன் உங்கள் நாட்டு கேம்பிரிட்ஜ் யூனிவர்சிடியில் ஆஸ்டிரோ பிசிக்ஸ் டிபார்ட்மெண்டின் எச்.ஓ.டி.. பாவம் ஒரு அப்பாவி. எங்கள் தொன்மையான பாரம்பரியமிக்க நல்ல குடும்பத்தின் ஒரே வாரிசு. ஒரு இனக்கவர்ச்சியில் உங்கள் மகளிடம் மயங்கியிருக்கலாம். நாங்கள் நல்ல குடும்பத்தில்தான் பெண்ணெடுப்போம். நாங்கள் வணங்கும், அரியக்குடி பெருமாள்தான்... திருமணத்திற்கு முன் உங்களை எங்கள் சம்மதம் கேட்கத் தூண்டியிருக்கிறார். உங்கள் சம்பிரதாயமான கடிதத்திற்கு சந்தோஷமான பதில் என்னால் எழுத முடியாததற்கு மன்னிக்கவும்...' கடிதத்தை மூடி வைத்தார்.

அத்துனை கவலையிலும்... கதிரேசனுக்கு... அவரே எழுதிய கடிதத்தை மீண்டும் ஒருமுறை படித்ததும் தெம்பு வந்தது.

நிமிர்ந்த பொழுது கையில் பெரிய தபால் கவருடன் மனைவி லட்சுமி நின்று கொண்டிருந்தாள். ஓ... எதிர்பார்த்த பதில் தபால் வந்து விட்டதோ!

உடன் எழுந்து பட்டாள அறைக்குள் சென்று, பெருமாள் படத்தின் முன்.. அந்த கடிதத்தை வைத்து வணங்கி விட்டுப் பிரித்தார்.

சம்பிரதாயமான துவக்கத்திற்குபின் கடிதம் விஷயத்திற்கு வந்தது :

தாங்கள் எங்களைப் பற்றி எவ்வளவு தெரிந்து வைத்திருக்கிறீர்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. ஆனால் உங்களைப் பற்றியும் உங்கள் குடும்பம், சமூக கலாசாரம் பற்றியும் நன்கு விசாரித்து நாங்கள் அறிந்திருக்கிறோம்.

**சோம. வள்ளியப்பன்**

உங்கள் கடிதத்திலிருந்து தாங்கள் எங்கள் குடும்பத்தினைப் பற்றி நல்ல அபிப்ராயம் வைத்து இல்லையோ என்று நினைக்கத் தோன்றுகிறது. அதை விளக்கும் பொருட்டு... கீழ்வருவனவற்றை எழுத வேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு.

1. எங்களுக்கு விவரம் தெரிந்த கடந்த ஏழு தலைமுறையில் ஒருமுறை கூட திருமண முறிவு என்பதே கிடையாது. அனைவரும் ஒருமுறை மணம் செய்தவர்கள்தான்.

2. நாங்களும் கூட்டுக் குடும்பம்தான் 73 வயதாகும் என் தந்தை பிரவுன் மாக்மிலனுடனும் 72 வயதாகும் என் தாயார் ஸ்டாபினியுடனும் தான் நானும் என் குடும்பமும் வாழ்ந்து வருகிறோம்.

3. என் விதவை அத்தை ஸ்டெபானி தன் கணவனை தன் நாற்பதாவது வயதில் இழந்தும், மறுமணம் செய்யாது எங்களுடன்தான் இருந்து வருகிறார்.

4. என் ஒரே மகன் எட்பெர்க்கும் லாஸ்ஏஞ்சல்ஸ் நகரில் கடந்த ஏழு வருடங்களாக வேலை செய்தாலும் அவன் குழந்தைகள் நலன் கருதி அவன் மனைவி பிரிஜிட்டாவும், குழந்தைகளும் எங்களோடுதான் வாழ்கிறார்கள்.

பாரம்பரியமிக்க நல்ல குடும்பத்தில் பிறந்த எங்கள் மகள் கார்லெட்டா உங்கள் மகன் டாக்டர். கே. பழனியப்பனை விரும்புவது குறித்து நானும் என் மனைவியும் நன்கு யோசித்து ஒரு முடிவெடுத்துத்தான் உங்களுக்கு எழுதினோம்.

இனங்கள் வேறுதான், நாடும், மொழியும், பாரம்பரியமும் நிச்சயம் வேறுதான். ஆனால் அடிப்படைக் கொள்கைகளில் எங்களுக்கு முரண் தெரியாததால் தான் வாழ்விலும் பிரச்னைகள் குறைவாகத்தான் இருக்கும் என நினைக்கிறோம். ஆயினும்... இந்தத் திருமணம் நிச்சயம் உங்கள் முழு சம்மதத்துடன்தான் நடக்க வேண்டும் என்பது எங்கள் விருப்பம். உங்கள் பதிலை எதிர்பார்க்கின்றோம்.

அன்புடன்,

..................

கணவனும், மனைவியும் இரவு முழுவதும் உறங்கவில்லை. மறுநாள் மஞ்சன் தடவி அமெரிக்காவிற்கு ஒரு தபால் எழுதினார்

கதிரேசன்.

# குட்டி ராஜாக்கள்!

**உள்ளாட்சித் தேர்தலில் எத்தனை மினி அரசுகள்? மின்மினி ராஜாக்கள் எத்தனைபேர் உருவாகப் போகிறார்கள்? இதோ கணக்கு–**

***1) கிராம பஞ்சாயத்து - 12,583***
***அதிலுள்ள வார்டுகள் - 1,18,141***
***2) பஞ்சாயத்து யூனியன் – 384***
***அதில் உள்ள வார்டுகள் – 6504***
***3) பேரூராட்சி – 635***
***அதில் உள்ள வார்டுகள் – 10,152***
***4) மாவட்ட ஊராட்சி - 28***
***அதில் உள்ள வார்டுகள் – 649***
***5) நகராட்சி – 104***
***அதில் உள்ள வார்டுகள் 3,368***
***6) மாநகராட்சி – 6***
***அதில் உள்ள வார்டுகள் 474***

***– மீனா திருநாவுக்கரசு***



நாத்திகன் ஒருவன் உணவு தயாரித்துக் கொண்டு பாலைவனத்தில் போய் அமர்ந்து கொண்டு, 'என் முன் உள்ள உணவை நானே என் கையால் எடுத்துச் சாப்பிடாவிட்டால், கடவுள் எப்படி என் வயிற்றை நிரப்புகிறார் பார்ப்போம் என்று நினைத்து மௌனமாக உணவின்முன் அமர்ந்தான்.

தற்செயலாக அந்த வழியே நல்ல பசியுடன் இரண்டு வழிப் போக்கர்கள் வந்தனர். நாத்திகன் முன் இருந்த உணவைப் பார்த்ததும் ஒருவன் ஆவலுடன் உண்ணப் போனான். ஆனால் கூடவே ஒரு சந்தேகம் வந்தது. இவன் ஏன் உணவை வைத்துக் கொண்டு சாப்பிடாமல் இருக்கிறான். ஒரு வேளை இதில் விஷம் கலந்திருக்குமோ என்று அஞ்சினான். நாத்திகனிடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தனர். பதில் இல்லை. கோபத்தில் இருவரும் அவனை பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாக அவன் வாயில் உணவைத் திணித்து விழுங்குமாறு செய்தனர். நாத்திகன் இறைவன் செயலை நினைத்து ஆத்திகன் ஆனான்.

– புராண சொற்பொழிவிலிருந்து:
என். ஜெயராமச்சந்திரன்



• புட்ரோஸ் புட்ரோஸ் காலி

# ஐ.நாவின் எதிர்காலம் ஒரு ?

நாட்டுப்புற சண்டைகளுக்கு ஆலமரத்தடியில் பஞ்சாயத்து. நாடுகளின் சண்டைகளுக்கு ஐ.நாவின் பஞ்சாயத்து. பல நாடுகளில் ரத்தம் ஓடிக் கொண்டிருக்கும் இன்றைய நிலையில் ஐக்கிய நாடுகள் சபையின் (UNO) அவசியம் குறித்து இரண்டு கருத்துக்கள் இல்லைதான். என்றாலும் சண்டை நடக்கும் நாடுகளில் நிலவும் வறுமையை விட ஐ.நாவில் இப்போது நிலவும் வறுமை அதிகம்.

ஐ.நாவுக்கு இரண்டு வகையான செலவுகள். ஒன்று தன் அலுவலக நிர்வாகத்துக்கான செலவு. இன்னொன்று பல நாடுகளில் தான், மேற்கொண்டிருக்கும் அமைதிப் பணிகளுக்கான செலவு. இரண்டுக்கும் சேர்த்து வருட பட்ஜெட் எவ்வளவு இருக்கும் என்று நினைக்கிறீர்கள்? அதிகமில்லை. 11,550 கோடி ரூபாய்தான்!

பல உறுப்பினர் நாடுகள் ஐ.நாவுக்குச் செலுத்த வேண்டிய உறுப்பினர் தொகையை ஒழுங்காகச் செலுத்துவதில்லை. அதிலும், அமெரிக்காவின் அட்டகாசம் கொஞ்சநஞ்சமல்ல. அது செலுத்த வேண்டிய தொகை மட்டும் 9200 கோடி ரூபாய். ஊருக்கெல்லாம் புத்தி சொல்லும் நாடு தன் முதுகை மட்டும் பார்க்கத் தவறிக் கொண்டிருக்கிறது.

இந்த நிலையில் ஐ.நா. கிட்டத்தட்ட திவாலாகிவிடும் போல இருக்கிறது. ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்கக் கூட சிரமப்படுகிறது. ஏராளமான சிக்கன நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறார் ஐ.நாவின் பொதுக் காரியதரிசி புட்ரோஸ் புட்ரோஸ் காலி. (அச்சுப் பிழை அல்ல, அவர் பெயரில் புட்ரோஸ் என்று இரண்டு தரம் எழுத வேண்டும்) ஆயிரம் ஊழியர்களை வீட்டுக்கு அனுப்பியாயிற்று. தலை போகும் அவசரம் என்றால் தவிர இனிமேல் எந்தச் சண்டை நாட்டுக்கும் அமைதிப்படையை அனுப்புவதில்லை என்று முடிவெடுத்தாயிற்று. ஏற்கெனவே சோமாலியா, ருவாண்டா ஆகிய நாடுகளிலிருந்து அமைதிப்படைகளை வாபஸ் பெற்றுக் கொண்டாயிற்று. (கட்டுப்படி ஆகவில்லை). மின்சாரச் செலவை மிச்சம் பிடிக்க ராத்திரி வேளைகளில் லிஃப்ட் இயங்குவதைக் கூட தன் அலுவலகத்தில் நிறுத்திவிட்டார் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

ஐ.நா.வின் எதிர்காலம் மட்டுமல்ல, புட்ரோஸ் புட்ரோஸ் காலியின் எதிர்காலமும் கேள்விக்குறிதான். 1991-ம் வருடம் பொதுச் செயலாளர் ஆனார். இந்த டிசம்பருடன் பதவிக் காலம் முடிகிறது. மீண்டும் போட்டியிடுகிறார்.

'ம்ஹூம்... நீ வேண்டாம் போ' என்கிறது அமெரிக்கா. 'நாங்கள் மீண்டும் பதவிக்கு வந்தால் கொடுக்க வேண்டிய நிலுவைத் தொகையைக் கொடுத்து விடுகிறோம்' என்கிறார் கிளின்டன். ஆனால் மீண்டும் காலியை இன்னொரு ஐந்தாண்டுக்கு ஆதரிக்கத் தயாரில்லை என்றும் சொல்கிறார். இது ஒரு எலெக்ஷன் ஸ்டன்ட்! கிளின்டனை எதிர்த்துப் போட்டியிடும் குடியரசுக் கட்சி வேட்பாளர் பாப் டோல் 'கிளின்டன், காலிக்கு ரொம்பவும்தான் அடங்கிப் போகிறார்' என்று குற்றம்சாட்டிக் கொண்டிருக்கிறார். கிளின்டன் பார்த்தார். 'நாமே முந்திக் கொள்வோம்' என்று 'இன்னொரு ஐந்தாண்டு உனக்கில்லை' என்று அறிவித்துவிட்டார்.

ஆனால் அது அவ்வளவு சுலபம் அல்ல.

ஐ.நாவின் விதிகளின்படி பாதுகாப்பு கவுன்ஸில் சிபாரிசு செய்பவரை பொதுச்சபை முறைப்படி நியமிக்கும். ஆகவே பாதுகாப்புச் சபையை 'கவர்' பண்ணுவதில்தான் பொதுச் செயலாளர் பதவிக்குப் போட்டியிடும் வேட்பாளர்கள் முனைவார்கள். இப்போதைக்கு களத்தில் புட்ரோஸ் மட்டுமே இருக்கிறார். அமெரிக்க தேர்தல் நவம்பர் 5-ல் முடிந்தவுடன் ஐ.நா. தேர்தல். அப்போது அமெரிக்கா வேறு ஆளை நிறுத்தலாம். எனினும் சென்ற முறை காலி அவர்களுக்கு பிரான்ஸ், ரஷ்யா, சீனா ஆதரவு அளித்தன. எப்போதும் அவருக்கு ஆப்பிரிக்க நாடுகள் 'செம' ஆதரவு கொடுக்கும். அது அப்படியே மங்காமல் இருக்கிறது.

அமெரிக்காவின் ஆதரவு இன்றியே மீண்டும் அவர் தேர்வு பெற முடியும். அப்படி வெற்றி பெற்று விட்டால் அமெரிக்கா என்ன செய்யும்? 'என் வீட்டோ அதிகாரத்தைப் பயன்படுத்தி அவர் வெற்றியை நிராகரிப்பேன்' என்கிறது அமெரிக்கா.

ஆதரவு இல்லாமல் காலி அவர்கள் தோற்றுப் போனால் எப்படியும் இன்னொருவர். ஆனால் நிதி இல்லாமல் ஐ.நாவே காலியாகி விட்டால்?

கேள்விக்குறிதான்.

- ராணிமைந்தன்



“என்ன செய்யப் போகிறாய்?” என்றான் அருண்மணி என்னைப் பார்த்து. பின்னணிப் பாடகன் அவன். எனக்கும், அவனுக்கும் ஏழு வருஷப் பழக்கம். கோடம்பாக்கத்தில் கிட்டத்தட்ட எல்லா ஸ்டூடியோக்களிலும் ஏறி இறங்கியிருக்கிறோம். திருவல்லிக் கேணியில் உள்ள புறாக்கூண்டு லாட்ஜ் அறை இன்னமும் காலி செய்யப்படாமல் எங்கள் பெயரில்தான் உள்ளது.

“அம்பாசமுத்திரத்துக்கு திரும்பிப் போயிடப் போறேன்.”

“போயி என்ன செய்வ? அப்பா கடையில் பலசரக்கு மடிப்பியா?”

“ஆமாம்.”

“அதுக்குத்தான் எம்.ஏ. தமிழ் படிச்சியா?”

“எம்.ஏ. தமிழ் படிச்சா பலசரக்கு மடிக்கக் கூடாதுன்னு விதியா?”

“ப்ச். நான் அப்படிச் சொல்லலை. அப்புறம் நீ ஏன் மெட்ராஸ் வரணும். நாயை விடக் கேவலமா ஒவ்வொரு ப்ரொட்யூசர் காலையும் பிடிச்சு சான்ஸ் கேட்கணும்?”

“என்ன பிரயோஜனம்? ஏழு வருஷமா எனக்கும், என் தமிழுக்கும் அவமானத்தைத் தவிர என்ன கிடைத்தது? ஒரே ஒரு பாட்டு அருள். ஒரே ஒரு பாட்டு. ஊத்திக் கொண்ட ஒரு படத்தில் பாட்டு எழுத ஒரு சான்ஸ் கிடைச்சதைத் தவிர, வேறு என்னால் என்ன சாதிக்க முடிந்தது?” என்றேன்.

என்னைப் பற்றி ஓரளவு உங்களுக்குத் தெரிந்திருந்தாலும் முழுவதும் சொல்லி விடுகிறேன். தமிழ் எனது மூச்சு என்றால் மிகையாகப்படும். பி.எஸ்ஸி., படிக்கும் பொழுது இரண்டாவது மொழியான தமிழில் பல்கலைக் கழகத்தில் முதலாவதாக வந்தேன். மேற்கொண்டு பௌதிகத்தில் பட்டமேற்படிப்பு படிக்க வலிய வந்த சந்தர்ப்பத்தை உதறி விட்டு எம்.ஏ. தமிழில் சேர்ந்தேன். எனக்குள் சரம், சரமாக இசையின் அருபங்களும், அதை உருவகப்படுத்தும் தமிழ் வரிகளும் ஓடிக் கொண்டே இருப்பதை என்னால் நிறுத்தவே முடியாது. இவ்வளவும் எதற்குச் சொல்ல வருகிறேன் என்றால் என் புலமை, எனக்குள் இழையும் இசைத் தமிழ் காரணமாக என்னால் சிறப்பாக வந்திருக்க முடியும். எத்தனை ஹார்மோனிய லல்லல்லாக்கள் முன், என் கவிதைப் பூக்கள் உதிர்ந்து வாடி விட்டன. ஏன் என்பது இந்த ஏழு வருடங்களாகப் புரியவில்லை.

எங்கள் மௌனத்தை கலைப்பதைப் போல

**சத்தியப்பிரியன்**



வாசலில் செருப்பு சப்தம் கேட்டது. பத்து வயது மதிப்புள்ள சிறுவன், "அருள் சார்! ஃபோன் வந்திருக்கு உங்களுக்கு" என்றான். கீழே போனான். நான் அன்றைய தேதி தினத்தாளை கையில் எடுத்துக் கொண்டேன்.

மீண்டும் மாடியேறி அருள் மணி வந்தபொழுது அவனது முகம் அதிகமாக மலர்ந்திருந்தது. சிகரத்தைத் தொட்டவன் போலிருந்தான்.

"என்ன?" என்றேன்.

ஒரு மூன்றெழுத்துப் பட நிறுவன முதலாளி, ஃபோன் செய்து அவரது அடுத்த படத்தில் மொத்தம் ஏழு பாடல்களையும் நான்கு டூயட், மூன்று மோனோ – இவனே பாட வேண்டும்; ஒப்பந்தம் போட இரவு ஏழு மணிக்கு வரச் சொன்னதைக் கூறியபொழுது அவன் முகம் மின்னி ஜ்வலித்தது.

பச்சையாகச் சொல்லப் போனால் நான் பொறாமையால் செத்துக் கொண்டிருந்தேன்.

"இன்னிக்கு ஒலியும் – ஒளியும் நிகழ்ச்சியில் சென்னை தொலைக்காட்சி நிலையம் சிறகுகள் விரியும் படத்திலிருந்து பாட்டு ஒளிபரப்பப் போகுது" என்றேன்.

"நீ எழுதின பாட்டா?" ஆவலாக அருள்மணி கேட்டான்.

"தெரியலை. என்ன பாட்டுன்னு போட மாட்டாங்க" என்றேன்.

சிறிது நேரம் அருள்மணி பேசவில்லை.

"நான் ஒண்ணு நினைச்சு வச்சிருக்கேன் வேலு! அது மட்டும் சரியா வொர்க்-அவுட் ஆனா நீ ஓஹோன்னு வருவ..." என்றான்.

அருள்மணி தனது ஜோல்னா பையில் ஒரு டைரி, ஒரு ஆல்பம் இரண்டையும் எடுத்து வைத்துக் கொண்டான். குளிக்கும்பொழுது மட்டும் என்னைப் பிரிந்திருக்கும் எனது கவிதைகள் அடங்கிய இரண்டு குயர் தடிமனான நோட்டு புத்தகத்தை வாங்கி அவனது பையில் போட்டுக் கொண்டான். என்னையும் அழைத்துக் கொண்டு கீழிறங்கினான்.

டெலிஃபோன் பூத்தில், வரிசையில் காத்திருந்தான். கடையில் ஓடிக் கொண்டிருந்த ஹிந்தி ட்யூனுக்கு பாடல் எழுதச் சொன்னான். நான் பொத்தானைத் தட்டினால் இயங்கும் எந்திரம் போல, ட்யூன் மாறாமல் பாட்டு எழுதி அவன் கையில் கொடுத்தேன். என் முதுகில் உற்சாகமாகத் தட்டி விட்டு ஃபோன் பண்ணினான்.

"மகாலிங்கத்துக்கு கனெக்ஷன் கொடுக்க முடியுமா? அருள்மணின்னு சொல்லுங்க." ரிஸீவரை மூடிக் கொண்டு அவன் சிரித்த அந்தக் கணத்தில் அவன் மனத்தில் என்ன இருந்தது என எனக்குத் தெரியாது.

"யாரு மாலியா? நான் அருள்டா. மாலி! ஒரு சின்ன தகவல் வேணும். இன்னிக்கு ஒலியும் – ஒளியும் நிகழ்ச்சியில் சிறகுகள் விரியும் படத்தில் என்ன பாட்டு ஒளிபரப்பப் போறீங்கன்னு சொல்ல முடியுமா? ஒரு நிமிஷமா? ஓகே ஐ'ல் வெய்ட்.... என்னது, 'தென்றல் சுமந்து வரும் நினைவில்' என்ற பாடலா? தேங்க்யூ. சும்மாத்தான். ஆண்டவன் புண்ணியத்தில் நல்லா போயிட்டிருக்குப்பா. இன்னிக்குக் கூட செட்டியார் கம்பெனிக்கு அக்ரிமெண்ட் போடத்தான் போறேன். ஓகே. வெச்சிடட்டுமா?"

டெலிஃபோனை வைத்துவிட்டு என் தோள்களை உலுக்கி வெரி ஃபைன். உனது தென்றல் சுமந்து வரும் நினைவில், திங்கள் தேயுதடி இரவில்'ங்கற பாடலைத்தான் ஒளிபரப்பப் போறாங்க."

"ஸோ வாட்?"

"சில சின்னச் சின்ன மூடநம்பிக்கைகள்... பலிக்குதோ இல்லையோ யாராலும் நினைக்காமல் இருக்க முடிவதில்லை. செட்டியாரிடம் நான் ஒப்பந்தம் போட்டு முடிச்சப்புறம் உன்னைப் பற்றி முழுமையா சொல்லப் போறேன். உன் பாடலை பைண்ட் நோட்டு புத்தகத்தில் வாசித்துக் காட்டுவதை விட விஷுவலா சொன்னா இன்னும் எஃபக்டிவா இருக்கும் இல்லியா? பேசிக்கிட்டே இருக்கும்போது இன்னிக்கு உன் பாட்டு டீ.வி.யில் டெலிகாஸ்ட் ஆகுதுன்னு சொல்லி செட்டியார் அதைக் கேட்டா உனது அலைச்சலுக்கு பலன் கிடைக்கும்னு நம்பறேன்" என்றான்.

அவன் கைகளைப் பற்றிக் கொண்டேன். என் கைகள் நடுங்கிக் கொண்டிருந்தன.

"சொல்லுங்க தம்பி" என்றார் செட்டியார். சில மனிதர்கள் நினைப்பதை விட எளிமையாக இருக்கிறார்கள்.

"என்ன பெயரில் பாட்டு எழுதறீங்க?"

"தமிழ்வேல் என்ற பெயரில்"

"சினிமாவில் பாட்டு என்பது சாதாரணமாப் பார்த்தா தேவைப்படாத விஷயமா படும். ஆனா மக்களின் பாலியல் வக்ரங்களின் வடிகால் இந்தப் பாடல் காட்சிகள். சர்வதேசத் திரைப்படங்களில் வரும் படுக்கையறைக் காட்சிகளைப் போலவே இவை. ஆயிரக்கணக்கில் பாடல் எழுதிய கண்ணதாசனின் பாடல்களில் எழுபத்தைந்து சதவீதம் காதல் பாடல்கள்தான். ஆனால் அதையும் மீறி கவிதை அமைவதுதான் ஒரு கவிஞனின் வெற்றி. எது வரைக்கும் படிச்சிருக்கீங்க?"

"எம்.ஏ. ஃபர்ஸ்ட் க்ளாஸ்" என்றான் அருள்மணி.

செட்டியார் கையெடுத்துக் கும்பிட்டார்.

"வேணாம் தம்பி. சினிமாப் பொழப்பு சூதாட்டத்தை விட மோசமான தொழில். பாம்பாட்டி பாம்பாலதான் சாவான் என்பது மாதிரி சினிமாக்காரன் சினிமாவாலதான் சாவான். நூறு படத்துக்கு மேல படம் எடுத்தவன் பேசற பேச்சா இதுன்னு உங்களுக்குத் தோணும். சினிமா தவிர அல்லைட் பிஸினஸ் நெறைய பண்றதுனாலதான் எங்க நிறுவனம் பிழைக்குது. இப்போ வேணாம் சினிமான்னு சொல்லுங்க, எங்க ட்ரஸ்டியில் மூணு பள்ளிக்கூடம் சென்னையில் நடக்குது. வாத்தியாரா சேர்த்து விட்டுடறேன்" என்றார்.

எனக்குள் பதிந்து போய் விட்ட வெறித்தனத்தை எளிதில் அழிக்க முடியாது. சில்லறை வேலையாக இந்த ஏழு வருடத்தில் நான்கு நிறுவனங்களிலாவது வேலை பார்த்திருப்பேன். எல்லா வேலைகளையும் பாதியில் ராஜினாமா செய்த காரணம் புதுப்படத்திற்கு பூஜை, பிரபல இசையமைப்பாளர் ட்யூனுக்கு பாட்டெழுத

வேண்டும் என தகவல் வரும். ஓடி விடுவேன். இதே அறிவுரையை, பாட்டெழுதும் - ஓரளவு புகழ்பெற்ற பாடலாசிரியர்களிடம் எத்தனை முறை கேட்டிருப்பேன். நானும், அருள்மணியும் இப்பொழுது மிகப் பிரபலமாய் இருக்கும் இசையமைப்பாளருடன் கிராமம், கிராமமாக அரசின் பிரசாரப் பாடல்களை போய்ப் பாடி இருக்கிறோம். செங்கை மாவட்டத்தில் எங்கள் சைக்கிள் சுற்றாத கிராமமே இல்லை எனலாம். இசையமைப்பாளர் ரெடி மசாலா பொடி மாதிரி ட்யூன் போடுவார். நான் சூடாக பாட்டெழுதுவேன். அருள்மணி பாடுவான். எல்லாம் எதற்காக? பள்ளிக்கூடத்தில் வெண்பா இலக்கணம் நடத்தவா?

"எவ்வளவு பாட்டு இதுவரைக்கும் எழுதி இருக்கீங்க?"

நான் எனது நோட்டு புத்தகத்தை எடுத்து நீட்டினேன்.

அவர் பார்த்து முடிக்கும்வரை தவித்துக் கொண்டிருந்தேன்.

"உவமைகள் எல்லாம் நல்லா வந்திருக்கு. புதுசாவும் இருக்கு. விஷுவலா உங்க பாடல் வரிகள் எப்படி அமையுதுன்னு தெரிஞ்சா இன்னும் நல்லா இருக்கும்" என்றார் செட்டியார்.

காத்துக் கொண்டிருந்தவன் போல அருள்மணி அன்றைய தினம் சென்னைத் தொலைக்காட்சி நிலையம் ஒளிபரப்பப் போகும் எனது பாடல் காட்சியைச் சொன்னான். செட்டியார் ஆர்வமாக தொலைக்காட்சிப் பெட்டியை உயிர்ப்பித்தார்.

மணி ஏழு ஐம்பது.

நான் காத்திருந்த பொன்னான கணம் தொடங்கியது.

தென்றல் சுமந்து வரும் நினைவில்
திங்கள் தேயுதடி இரவில்
கண்கள் சுமந்து வரும் கனவில்
நெஞ்சம் ஓயுதடி விரைவில்

என்ற எனது பாடலை புதுமுகம் அஜீத்குமார் ஊட்டி மலைப் பின்னணியில் பாடி வருவதான காட்சி.

இதற்குக் கூட அருள்மணிதான் சந்தர்ப்பம் வாங்கித் தந்தான். தொலைதூரத்தில் இருக்கும் காதலியின் கடிதம் கண்டதும் கதாநாயகன் பாடுவதாக காட்சி அமைப்பு. முழுவதும் ஊட்டியில் எடுக்கப்பட்ட பாடல்.

இதில் இன்னொரு சிறப்பு அம்சம். கதாநாயகன் வர்ணிக்க, வர்ணிக்க பாடல் முழுவதும் ஒரு மலைஜாதிப் பெண் கேட்டுக் கொண்டு தொடர்ந்து வருவாள். இரண்டு க்ளோசப் கூட அவளுக்கு வரும். க்ரூப் டான்ஸர் சுமதியைத் தான் அந்த க்ளோசப்புகளுக்கு பயன்படுத்தியிருந்தார்கள். பாடல் காட்சியும், பாடல் வரிகளும் கோடம்பாக்கம் வட்டாரத்தில் பிரமாதமாகப் பேசப்பட்டும் என் அதிர்ஷ்டமின்மை காரணமாகவோ, என்னவோ படம் சரியாகப் போகவில்லை.

அந்தப் பாடல் காட்சி முடிந்ததும் செட்டியார் தொலைக்காட்சிப் பெட்டியை அணைத்து விட்டார். பாடல் எப்படி இருந்தது என கேட்கத் தயக்கமாக இருந்தது. யோசனை செய்தவண்ணம் குறுக்கும், நெடுக்குமாக நடந்தார். "அருள்! நாளைக்கு நம்ம ஆஃபீசுக்கு பாட வர்றப்போ தம்பிக்கு நல்ல முடிவு சொல்றேன்" என்றார்.

மறுநாள் அருள்மணி வீட்டிற்குப் போனேன்.

"கங்கிராஜுலேஷன்ஸ்" என்றபடி அருள்மணி என் கைகளைப் பிடித்துக் குலுக்கினான்.

ஒரு நிமிடம் பரவசமாகி, "செட்டியார் என்ன சொன்னார்?"

"அவங்க நிறுவனம் நடத்தும் வாரப் பத்திரிகையில் உன்னை உதவி ஆசிரியரா சேரச் சொல்லிட்டார். மாசம் ரெண்டாயிரம் சம்பளம்."

வெறுப்பாகி "போடா" என்றேன்.

"சினிமா பாட்டைப் பத்தி கன்னா, பின்னான்னு திட்டறாரப்பா செட்டியார். குறிப்பா இப்போ வர்ற பாட்டில் பட்லர் இங்கிலீஷ்தான் இருக்கு. ஒருத்தன் கூடத் தமிழ்க் கவிஞன்னு சொல்லிக்க லாயக்கில்லைன்னு சொல்றார். இன்னொரு விஷயம்! செட்டியார் தமது நிறுவனத்தோட நூற்றி இருபத்தைந்தாவது படத்துக்கு பூஜை போட்டுட்டார். கதாநாயகி யார் தெரியுமா?" என்றான்.

"யார் கரீஷ்மா கபூரா?" என்றேன் கடுப்புடன்.

"இல்லை சுமதி. எந்த சுமதின்னு கேள். உன் பாடல் வரிக் காட்சியில் மலைஜாதிப் பெண்ணாக ஒரு துணை நடிகை வருமே. அதுதான் கதாநாயகி. க்ளோசப் காட்சிகளில் ஒப்பனையற்ற அவள் முகத்தில் தெரிந்த அப்பாவித்தனம்தான் காரணம்னு செட்டியார் சொன்னார்!"

நான் அதிர்ந்து போய் நின்றேன்.

---



அமைச்சர்: குடம் குடமாய்த் தண்ணீரை ஊற்றலாம் அரசே!

அரசன்: சே! கஜானா நிரம்பி வழிய என்ன செய்யலாம்னு உம்மிடம் போய் யோசனை கேட்டேன் பாரும்!

—உ. ராஜாஜி

---

மனசில இருந்தது கொட்டிட்டேன்:



— வாழப்பாடி ராமமூர்த்தி

# காலை வாரக் காத்துக் கொண்டிருப்பார்கள்!

சென்னை சட்டக்கல்லூரியில் நான் படிக்கும்போது 'தேசிய மாணவர் தமிழ் வளர்ச்சிக் குழு' என்ற ஓர் அமைப்பை ஸ்தாபன காங்கிரஸ் மாணவர்களான நாங்கள் நடத்திக் கொண்டிருந்தோம். காங்கிரஸ்காரர்களுக்குத் தமிழ் உணர்வும், மொழிப்பற்றும் கிடையாது என்பது போன்ற ஒரு தோற்றத்தை தி.மு.க. உருவாக்கியிருந்தது. அதை உடைக்கவே நாங்கள் இந்த அமைப்பைத் துவக்கினோம். அந்த அமைப்பின் மாநில பொருளாளராக நான் இருந்தேன். சென்னை உட்பட மாவட்டத் தலைநகர்களில், தமிழ் வளர்ச்சிக் குழுவின் சார்பாக நிறைய பொதுக்கூட்டங்கள் நடத்தினோம். இதன் காரணமாக, தலைவர் காமராஜ் அவர்களை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது.

சட்டப் படிப்பு முடிந்து ஊருக்குத் திரும்பும் போது, பெரியவர் (காமராஜ்) அவர்களைச் சந்தித்துச் சொல்லிவிட்டுப் போகலாம் என்று சென்றேன். 'ஊருக்குப் போய் என்ன செய்யப் போகிறாய்' என்று கேட்டார். 'கட்சி வேலைதான் செய்யணும்' என்றேன். "உன்னை சேலம் மாவட்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர் பதவியில்

போட்டிருக்கேன் போய் வேலையைப் பாரு" என்று சொன்னார். எனக்கு ஆச்சர்யம், இன்ப அதிர்ச்சி. அதே போல் 1971-ல் மேட்டூர் நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிட பலருக்குப் பலமான சிபாரிசுகள் இருந்தும், ஸ்தாபன காங்கிரஸ் வேட்பாளராக என்னைத் தேர்ந்தெடுத்தார் தலைவர் காமராஜ்.

அப்போது சேலம் மாவட்ட காங்கிரஸ் தலைவராக இருந்த டி.என். காளியண்ணன் அவர்களும், எம்.பி. சுப்பிரமணியம் அவர்களும் சரியான சமயங்களில் தலைவர் அவர்களிடம் என்னைப் பற்றி எடுத்துச் சொன்னதும், ஊக்குவித்ததும் தான். இப்படியாக மாவட்ட அரசியலில் அடித்தளம் போட்டு, பின்னர் பாராளுமன்ற உறுப்பினராகவும் ஆனேன்.

ஆனால் மறுபுறம்... ஒரு சின்ன வாய்ப்பைக் கூட விட்டு வைக்காமல் எல்லா வாய்ப்பையும் பயன்படுத்தி எனது காலை வார நினைத்தவர்கள் பலர்!

1985-ம் ஆண்டு, சேலத்தில் மே தின கொண்டாட்டம். ஐ.என்.டி.யு.சி. சார்பாக நடத்தப்பட்டது. இப்போது ஒரிஸ்ஸா கவர்னராக இருக்கும் ஜி. ராமானுஜம் ஐ.என்.டி.யு.சி.யின் தலைவர். நான் அதன் மாநிலத் துணைத் தலைவர். பிரதமர் ராஜீவ் அவர்கள் கலந்து கொள்வதாக ஏற்பாடு. கடைசி நிமிடத்தில்தான் பிரதமர் ஒப்புதல் கிடைத்தது என்பதால் ரொம்பவும் கடுமையாக உழைக்க வேண்டியதாகி விட்டது.

விழா நெருக்கத்தில் எங்களுக்கு ஒரு செய்தி வந்தது. பாதுகாப்பு காரணமாக மேடையில் ஜி. ராமானுஜமும் ரங்கராஜன் குமாரமங்கலமும்தான் அமர வேண்டும் என்று டெல்லியில் இருந்து செய்தி வந்ததாகச் சொன்னார்கள். அப்போது தமிழக காங்கிரஸ் தலைவர் பொறுப்பில் இருந்தவர் பழநியாண்டி. மத்தியில் மூப்பனார் பொதுச் செயலாளர்.

உளவுத் துறை அதிகாரி ஒருவரிடம் இதுபற்றி கேட்டபோது, 'பிரதமருடன் யார் மேடையில் உட்கார வேண்டும் என்பதெல்லாம் தீர்மானிக்கப்படவில்லையே!' என்றார். அதே போல் விமான நிலையத்தில் வரவேற்க ஜி. ராமானுஜத்திற்கு மட்டும்தான் அனுமதி என்றார்கள். சரி ஏதோ சதி நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டேன்.

இந்த விழாவுக்கு சிவாஜி அவர்களையும் அழைத்திருந்தேன். 'ராமு, உன்னை நம்பித்தான் வர்றேன். ஏனென்றால் அவர்கள் என்னை அவமானப்படுத்தி விடுவார்கள்' என்று சொல்லியிருந்தார் அவர். இந்தக் குழப்பங்களுக்கு மத்தியில்தான் விழா வேலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

விழா அன்று சேலம் வந்த பிரதமர் அவர்களை, ஜி. ராமானுஜம் உட்பட பலர் சென்று வரவேற்றோம். அதே போல் மேடைக்குச் செல்லும் வழியில் நாற்காலி போட்டு, சிவாஜி அவர்களை அமர்த்தி யிருந்தேன். பிரதமரிடம் அவருக்குத் திருமண நாள் என்றும் சொல்லியிருந்தேன். பிரதமருடன் நானும் விறுவிறுவென்று மேடைக்குச் சென்று விட்டேன். என்னைத் தடுக்கும் தைரியம் யாருக்கும் இல்லை.

விழாவில் பேசும் போது, சிவாஜிக்குத் திருமண நாள் வாழ்த்துச் சொன்னது உட்பட பலரது பெயரைக் குறிப்பிட்ட ராஜீவ், விழா வெற்றிகரமாக நடக்கப் பாடுபட்ட என் பெயரைக் குறிப்பிட வில்லை. இதனால் எங்கள் தொண்டர் களுக்கு ஏக வருத்தம். எனக்கும் இது மனத்தில் உறுத்திக் கொண்டே இருந்தது.

சரியாக இரண்டாண்டுகளுக்குப் பிறகு ராஜீவ் அவர்களுடன் நெருக்கமாகப் பழகும் வாய்ப்புக் கிடைத்தபோது, 'சேலம் மே தின விழாவை ஞாபகப்படுத்தி 'அன்று பேசும் போது ஏன் என் பெயரைக் குறிப்பிடவில்லை?' என்று உரிமையுடன் கேட்டேன். அவர் சிரித்துக் கொண்டே, 'என்னிடம் குறிப்புக் கொடுத்தவர், உங்கள் பெயரை அதில் சேர்க்கவில்லையே' என்றார். அந்தக் குறிப்பைக் கொடுத்தவர் இன்று தமிழ் மாநில காங்கிரஸ் முன்னணித் தலைவர் மட்டுமல்ல; மத்திய அமைச்சரும் கூட!

இதுபோல என்னை இருட்டடிப்புச் செய்த ஏராளச் சம்பவங்கள். காங்கிரஸ் பார்வையாளராக என்னை நியமிப்பார்கள். ஆனால் திண்டிவனம் ராமமூர்த்திக்குத் தகவல் போகும். வேண்டும் என்றே என்னை நீக்கிவிட்டு, 'தெரியாமல் நடந்து விட்டது' என்று பின்னால் சொல்வார்கள். 1989 தேர்தலில் பிரணாப் முகர்ஜி, எனக்காகப் பலமான சிபாரிசு செய்ததன் பேரில்தான் எனக்குப் பாராளுமன்ற சீட்டே கிடைத்தது! இப்படி ஒவ்வொரு கட்டத்திலும் எதிர்நீச்சல் போட்டே கட்சிக்குள் வளர்ந்தவன் நான்!

சந்திப்பு : **ப்ரியன்**
வண்ணப்படம் : **யோகா**

# கைது செய்யப்படுவாரா ராவ்?

**ல**க்குபாய் பாதக் வழக்கில், ராவ் கோர்ட்டில் விசாரணைக்கு ஆஜர் ஆக வேண்டும் என்று நீதிபதி அஜித் பாரிஹோக் உத்தரவு பிறப்பித்ததை அடுத்து, அவரைக் கைது செய்ய முடியுமா என்பது பற்றி சட்ட வல்லுநர்கள் விவாதித்து வருகிறார்கள். "புலன் விசாரணை நிலை முடிந்து, கோர்ட்டின் விசாரணை நிலையை இந்த வழக்கு எட்டி விட்டது. எனவே, கோர்ட் உத்தரவிட்டால் ராவை சி.பி.ஐ கைது செய்யத்தான் வேண்டும்" என்கிறார் சாந்திபூஷன். ஆனால் ஜெனீவாவில் தங்கி ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கும் ராவின் வழக்கறிஞர் கபில் சிபல் அத்தனை தூரத்துக்கு விட்டுவிட மாட்டார் என்கிறார்கள்.

● சென்ற வாரம், தமது வீட்டுக்குள்ளேயே வழுக்கி விழுந்து, கையை முறித்துக்கொண்டு மருத்துவமனையில் படுத்திருக்கும் லக்குபாய் பாதக்கிடம் விஷயத்தைச் சொன்ன போது, மகிழ்ச்சியால் அவர் கண்கள் பளபளத்தன. உதட்டில் புன்சிரிப்பு. "நான் வெற்றி பெற்று விட்டேன்!" என்றார் லக்குபாய் பாதக்.

● டி.என். சேஷனுக்கு மாக்சைசாய் விருது கிடைத்த உடனே, எலக்‌ஷன் கமிஷன் அலுவலகத்தில் ஒரு பாராட்டு விழா ஏற்பாடு செய்ய ஊழியர்கள் தீர்மானித்திருந்தார்கள். கில்லும், கிருஷ்ணமூர்த்தியும் 'பாராட்டு விழாவா? எதுக்கு?' என்று ஒரேயடியாக மறுத்துவிட்டார்களாம். ஊழியர்களுக்கு மன வருத்தம்தான். அதைவிட வருத்தம் சேஷனுக்குத்தான். தாம் மாக்சைசாய் விருது வாங்கும் புகைப்படத்தை எந்தப் பிரபல பத்திரிகையும் வெளியிடவில்லை என்று!





* ருனுகோஷ்

● ராஷ்ட்ரபதி பவனில் நடக்கும் எத்தனையோ நிகழ்ச்சிகளில் புத்தக வெளியீட்டு விழாக்களும் உண்டு. மத்தியபிரதேசத்தைப் பற்றிய தொகுப்பு நூல் ஒன்றை, அந்த மாநிலத்தைச் சேர்ந்த பத்திரிகை ஒன்று, சமீபத்தில் அப்படி வெளியிட்டது. ம.பி.யைச் சேர்ந்த குடியரசுத் தலைவர் சங்கர் தயாள் சர்மாவின் பெயருக்கு முன்னால் 'டாக்டர்' என்று குறிப்பிட்டு விட்டு, பின்னால் D. Litt. என்றும் அச்சிட்டிருந்தது. சர்மாவுக்குக் கடும் கோபம். "டாக்டர் சரி. எதற்கு D. Litt. போட்டீர்கள்?" என்று கடிந்து கொண்டார்.

● ராணுவத்தில் பயன் ஏதும் இல்லாமல் இருக்கும் குதிரைகளை ஏலத்தில் விட்டு விடலாம் என்று தீர்மானித்திருக்கிறார் பாதுகாப்புத் துறை அமைச்சர் முலாயம்சிங் யாதவ். "ஆகா, சரியான யோசனை!" என்று ஆமோதித்து விட்டார் என்.வி.என். சோமு. 2500 – 3000 குதிரைகள் அடுத்த ஆண்டு ஏலம் விடப்படுமாம்.

● அர்ஜுனா விருது வழங்கும் சமயம், அனில் கும்ப்ளேயைப் பற்றிச் சொல்லும்போது, முதல் டெஸ்ட்டிலேயே சதம் அடித்தவர் என்று குறிப்பிட்டார்கள். அவரோ ஒரு போலர். முதல் டெஸ்ட்டில் செஞ்சுரி அடிக்கவும் இல்லை. யார் இப்படி எல்லாம் தவறான செய்தியை ராஷ்ட்ரபதி பவன் அதிகாரிகளுக்குக் கொடுக்கிறார்களோ தெரியவில்லை!

● ராவின் முன்னாள் பத்திரிகை – மக்கள் தொடர்புத் துறைச் செயலர், இப்போது சிகாகோவில் இருக்கிறாராம். இந்தியா திரும்புவதாக முடிவு செய்து விட்டார். ஐ.ஏ.எஸ். பதவியை ராஜிநாமா செய்து விடவும் முடிவு செய்து விட்டாராம். யூரியா உர வழக்கில் அவரும் தேவைப்படுவார். வரட்டும் என்று காத்திருக்கிறது சி.பி.ஐ.

● 22 டிரங்குப் பெட்டிகளில் சுமார் நாலு கோடி ரூபாயைத் தம் வீட்டுக்குள்ளேயே சர்வசாதாரணமாக வைத்திருந்த சுக்ராமை, முதன் முதலில் காட்டிக் கொடுத்து விட காங்கிரஸ் தலைமை தயாராக இருக்கவில்லை. ராவின் பல நெருக்கமான தலைவர்கள் எடுத்துச் சொன்ன பிறகுதான் அவரை உதறிவிட (அல்லது கைவிட்டுவிட?) காங்கிரஸ் கட்சி முடிவு எடுத்ததாம். பீனேன் நொறுங்கி விழுந்ததில் இறந்து போன முன்னாள் பஞ்சாப் கவர்னரின் பணம் இது என்று கூட சுக்ராம் சொல்லித் தப்பித்துக் கொள்ள முயன்றதாக ஒரு செய்தி!

● தில்லி யூனிவர்சிடி அருகே இருக்கும் மால் ரோடு வீட்டில் வசிக்கிறார். தொலைத் தொடர்புத் துறையில் நிதிப்பிரிவு இயக்குனராக இருந்த ருனு கோஷ். (தற்போது சிறையில்). கணவர் பி.கே. கோஷ், எழுத்தாளர், புகைப்பட நிபுணர். தம் வீட்டு காம்பவுண்டுக்குள்ளே இருக்கும் அவுட் ஹவுஸ்களில் சிலரைக் குடிவைத்து, வாடகையும் வசூலித்துக் கொண்டிருக்கிறார் ருனு! தமது ஃபைல்களை நேரடியாகவே சுக்ராமுக்கு அனுப்பி வைக்கிற அளவுக்கு, தமது உறவை வளர்த்துக் கொண்டவர் ருனு. ருனு அலங்காரப் பிரியையும் கூட!

**- நியூஸ்வாலா**



"மன்னருக்கு சாமரம் வீசிய பணிப் பெண்களுக்குப் பதிலாக ஆண்களை ராணி நியமித்து விட்டாரே ஏன்?"

"ராணியே சாமரம் வீசிய பெண்ணாக இருந்தவராச்சே! ஒரு முன்ஜாக்கிரதை தான்."

– லலிதா செல்லப்பா



# 21

எல்லா புராணங்களும் போற்றும் அவதாரம் நரசிம்ஹ அவதாரம்; எல்லா பக்தர்களும் புலவர்களும் துதிக்கும் அவதாரம் நரசிம்ஹ அவதாரம்.

சரஸ்வதி நதி தீரத்திலே ரொம்ப சிந்தனையோடு - கவலையோடு அமர்ந்திருந்தார் வியாஸர். நாரதர் அங்கே எழுந்தருளினார்.

"இவ்வளவு சிந்தை உமக்கு எதற்கு...?'' என்று வியாஸரிடம் கேட்டார்.

சிதா - சிந்தா - இவை இரண்டிலே எது உயர்ந்தது என்று கேட்டால் 'சிதா'தான் உயர்ந்தது என்று சொல்லி விடலாம்.

சிதா என்றால் சிதை - விறகு - விராட்டிகளினால் ஆன படுக்கை!

சிந்தை என்பது மனத்திலே எழுகிற கவலை.

- இந்த இரண்டிலே சிதையே உயர்ந்தது என்றால்...? சிதையானது பிராணனற்ற சரீரத்தைத்தான் எரிக்கிறது. சிந்தையோ பிராணனுள்ள சரீரத்தையே எரிக்கிறது! அதனால் சிதையே தேவலாம்!



"இப்படிப்பட்ட சிந்தைக்கு இடம் கொடுக்கலாமா...? அந்த சிந்தை போக வேணுமென்றால் ஸ்ரீ கிருஷ்ண புராணத்தை நீர் எழுத வேண்டும்'' என்று வியாஸரிடம் சொன்னார் நாரதர்.

"இதுவரை எழுதின மகாபாரதத்திலே கிருஷ்ண புராணத்தை ஆங்காங்கே கோடி காண்பித்திருக்கிறீர்கள். அதை நன்றாக, விரிவாக, ஸ்பஷ்டமாக எடுத்துச் சொல்லவில்லை. அவன் லீலையைச் சொல்லக்கூடிய ஒரு புராணத்தை இயற்றுங்கள்; உமக்குத் தெளிவு பிறக்கும்...'' என்றார் நாரதர்.

அதற்காகவே ஸ்ரீமத் பாகவதம் இயற்றப்பட்டது. கிருஷ்ணாவதாரத்துக்காகவே எழுந்த பாகவத புராணத்திலே, 'அற்புதமான அவதாரம்' என்று கிருஷ்

ணரைச் சொல்கிறார் வியாஸர். ஆனால் அவரே நரசிம்ஹனைச் சொல்கிற போது அதியத்புத அவதாரம் என்று விளக்குகிறார்!

ருக்மிணி பிராட்டி, கண்ணனுக்கு ஓலை எழுதுகிறாள். அதிலே ஏழு இடங்களில் பகவானை அழைக்கிறாள். ஓரிடத்தில் கூட 'கிருஷ்ணா' என்று அவனைக் கூப்பிடவில்லை. ஏன்...?

'கிருஷ்ணன் பொய் சொல்கிறவன்; புளுகிலே வல்லவன்' என்றெல்லாம் கோபிகாஸ்த்ரீகள் அவனைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். 'பொய் அவதாரம்' ஆனதினாலே கிருஷ்ணனைக் கூப்பிட்டால் காரியம் ஆகாது! பொய்யில்லாத பெருமான் யாரென்றால் நரசிம்ஹன்தான்! அழைத்தவுடனே வந்து ரக்ஷிக்கக்கூடியவன். எனவே ருக்மிணியின் இதயம் கவர்ந்த அவதாரமாகிறது இந்த அவதாரம்.

ராமாவதாரத்திலேயும் மாரீசன் ராமனை 'நரசிம்ஹா' என்று அழைக்கிறான். ஆஞ்சநேயரும் இலங்கையிலே சீதா தேவியிடம் 'அம்மா நீங்கள் ஏன் அழுகிறீர்கள்! என் முதுகிலே ராமன் வருவான். நரசிம்ஹனைப் போல் வருவான்' என்கிறார்.

ராமாவதாரத்திலே எங்கு தொட்டாலும் இப்படி நரசிம்ஹ பலம் தெரிகிறது.

மஹாபாரத சாரமான விஷ்ணு சஹஸ்ரநாமத்திலே, விச்வ சப்தத்தினாலே, விச்வயோனி என்று நரசிம்ஹனைக் காட்டினதாலே... நரசிம்ஹன்தான் விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஸாரம் என்று காட்டியிருக்கிறார்கள். விஷ்ணு சஹஸ்ரநாமம் முழுதுமே பாரதத்தின் ஸாரம் என்பதாலே மகாபாரதம் மொத்தமும் நரசிம்ஹனையே கொண்டாடுகிறது என்று தெரிகிறது.

பத்மாவதி கல்யாணத்திலே ஒரு காட்சி. தாயார் மணவறையிலே மணக்கோலத்திலே அமர்ந்திருக்கிறார். எல்லா உணவு வகைகளும் தயாராகி நிரம்பியிருக்கிறது. ரிஷிகள், வேத வித்துக்கள் உணவு கொள்ளக்



காத்திருக்கிறார்கள். 'உணவை யாருக்கு நிவேதனம் செய்துவிட்டுப் பரிமாறுவது?' என்கிற கேள்வி எழுகிறது.

பகவானிடமே கேட்கிறார்கள். "அஹோபில க்ஷேத்திரத்திலே உள்ள நரசிம்ஹனுக்கு நிவேதனம் செய்து உணவு விநியோகிக்கப்படட்டும்" என்று சொல்கிறார் ஸ்ரீநிவாஸ பெருமாள். அதனால்தான் ஸ்ரீநிவாஸர் நரசிம்ஹருக்குக் கைகூப்பி வணங்குவதை இன்னமும் அஹோபில க்ஷேத்திரத்திலே பார்க்கலாம். ஸ்ரீ ராமனாலும் ஸ்ரீநிவாஸ பெருமாளினாலும் வணங்கப்பட்டவர் என்பதாலே நரசிம்ஹனை **பெரிய பெரிய பெருமாள்** என்று அழைக்கிறோம்.

பெரியாழ்வார் பல்லாண்டு பாடுகிறபோது 'அந்தியம்போதில் அரியுருவாகி அரியை அழித்தவனை...' என்று பாடுகிறார்! அன்று அவன் உக்கிரமூர்த்தியாக இருந்ததாலே யாரும் அருகே போய்ப் பல்லாண்டு பாட முடியவில்லை. அந்தக் குறை தீர, பிற்காலத்தில் பாடினார்!

அஹோபில க்ஷேத்திரத்திலே அவன் அழகைப் பாடுகிறார் திருமங்கையாழ்வார்.

ஹிரண்யனை சம்ஹாரம் பண்ணியவன் அங்கே காட்சியளிக்கிறான். ஆழ்வார் பார்க்கிறபோது அவருக்கு என்ன தெரிகிறதாம் அங்கே...? சிம்ஹங்கள் எல்லாம் யானைகளை அடித்துத் தின்றுவிட்டு, தந்தங்களை வகைப்படுத்தி வைத்திருக்கிறதாம்! ஒவ்வொரு தந்தத்தையாகக் கொண்டு வந்து நரசிம்ஹனின் திருவடியிலே இட்டு ஓம் நரசிம்ஹாய நம : என்று அர்ச்சனை பண்ணுகிறதாம். சிம்ஹம் சிம்ஹத்தை அர்ச்சனை பண்ணும் காட்சி சிங்கவேள் குன்றத்திலே!

திருமங்கையாழ்வாரின் அழகிய பாசுரம் ஒன்றில் 'நரசிம்ஹனைப் பாடாத பாட்டும் ஒரு பாட்டா? அவனைப் பேசாத நாவும் ஒரு நாவா? அவன் புகழ் கேளாத செவியும் ஒரு செவியாகுமா?' என்று கேட்கிறார்.

**ஸ்ரீ**ரங்கம் ரங்கநாதர் ஆலயத்திலே கம்பராமாயண அரங்கேற்று மண்டபம் இருப்பது தெரியும். அங்கே கம்பர் யுத்த காண்டம் ஆரம்பிக்கும்போது இரணியன் வதைப்படலத்தைச் சொன்னாராம். விபீஷணன் ராவணனுக்கு உபதேசம் பண்ணுகிறான். 'இப்படியெல்லாம் தீமை செய்யாதே! இரணியனை அழித்த நரசிம்ஹன் தான் ராமனாக அவதரித்திருக்கிறான். அவனை எதிர்த்து அழிவைத் தேடிக் கொள்ளாதே' என்று நரசிம்ஹ அவதாரக் கதையைச் சொல்கிறான்...

அரங்கேற்று மண்டபத்தில் இருந்த மகான்கள், பண்டிதர்களெல்லாம் ஆட்சேபித்தார்களாம். வால்மீகியின் மூலத்திலே நரசிம்ஹ வதைப் படலம் கிடையாது. எனவே கம்பராமாயணத்திலும் அது இருக்கக் கூடாது. அதை நீக்கிவிட்டு கம்பர் தம் ராமாயணத்தை அரங்கேற்றலாம் என்றார்களாம்.

கம்பனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை... அப்போது ஒரு சில வித்வான்கள், 'இந்த புராணத்தின் தெய்வீக அம்சம் என்ன என்பதைக் காட்டினால் இதை ஒப்புக் கொள்கிறோம்' என்றார்கள்.

கம்பர், அழகிய சிங்கர் சன்னதிக்கு எதிரிலே போய் நின்று கொண்டார். 'ஒன்றே உரைக்கில் ஒன்றேயாம்...' என்ற காப்புச் செய்யுளில் ஆரம்பித்துப் பாட ஆரம்பித்தார். 'ஆரடா சிரித்தாய்?' என்ற சொல் வந்த கட்டத்திலே, உள்ளுக்குள்ளே விக்ரஹ ரூபியாய் இருக்கும் பெருமான் சிரித்து, தலையை ஆட்டி, இரு கைகளையும் தூக்கி, 'நான் ஏற்கிறேன்' என்று இரணியன் வதைப் படலத்தை ஏற்றானாம். ஆகையினாலே இரணியன் வதைப் படலம் கம்பராமாயணத்திலே இடம்பெற்று அரங்கேறியது. பகவானே அங்கீகரித்த அவதாரமாகிறது நரசிம்ஹ அவதாரம்!

**ந**ம்மாழ்வார் வாக்கிலே வருவதைப் பாருங்கள் : 'அங்கே, அப்பொழுதே அவன் வீயத் தோன்றியவன்' என்கிறார். நினைத்த இடத்தில் நினைத்த கணத்தில் தோன்றியவனின் காருண்யத்தைச் சொல்கிறார். **'என் சிங்கப் பிரான்'** என்று அவனை அழைக்கிறார். அந்தப் பாசுரத்தை பிறர் சொல்லும்போது, அனைவருமே அவரவர் நரசிம்ஹனை அபிமானிக்கும்படியாகச் செய்துவிட்டார் நம்மாழ்வார்.

காஞ்சி வரதராஜ பெருமாளைப் பார்த்து, 'நரசிம்ஹா' என்கிறார் சுவாமி தேசிகன். உலகத்தின் எல்லா பதார்த்தங்களிலுமே நிறைந்திருக்கிறான் அவன். என்றாலும், அவன் வெளிப்பட்டது ஒரு ஸ்தம்பத்திலிருந்துதான். 'குழந்தை ப்ரஹலாதன் எந்த இடத்தைச் காட்டுவானோ?' என்று காருண்யத்துடன் எல்லா இடத்திலும் நிறைந்து இருந்தான். எங்கு தட்டினாலும் உடனே வர சித்தமாயிருந்தான்.

வேகத்தைப் போல், கருணையும் தயையும் அதிகம் இந்த அவதாரத்திலே!

அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர் சிங்க உருவாய்
உளந்தொட்டு இரணியன் ஒண்மார்வகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி...

என்று பெரியாழ்வார் பாடுகிறார்.

அளந்திட்ட தூண்! தங்கச் செங்கல் கொண்டு ரத்தினங்கள் இழைத்த ஸ்தம்பமாம் அது! குழந்தை ப்ரஹலாதனை இழுத்து வந்து,

# 'டீலரா'...?

நீங்கள் கேட்டவை – தராசு

❑ ரூ. 25 பரிசு பெறுபவர்
பாலாஜி.
76, ஜெ.பி. கீழத் தெ[ரு]
குடந்தை – 1.

● ப. மூர்த்தி, பெங்களூர் – 21.

? சன் டீ.வி.யில் மது பான விளம்பரம் வருவது சரிதானா...?

! எந்த டீ.வி.யிலும் வருவது நியாயமில்லை. குழந்தைகள், பெரியோர் பாகுபாடின்றிப் பார்க்கிறார்கள். கிரிக்கெட் ஹீரோக்களின் உற்சாக பானமென்பது எவ்வளவு கௌரமரான விஷயம்! காம்ப்ளானும் கிங்ஃபிஷரும் ஒரே ரேஞ்சுக்குப் போய் விடுகின்றன. சட்டபூர்வமாகத் தடைவிதிப்பது அவசியம்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சு. சுவாமி, ஜெ மீது காட்டுவது பாசமா? துவேஷமா...?

! வேஷம்!

● இரா. திலீப், திருச்சி – 14.

? பிள்ளையார் ஊர்வலங்களால் யாருக்கு லாபம்...?

! பொம்மை செய்பவர்களுக்கும், மாட்டு வண்டி, லாரி, டெம்போ வாடகைக்கு விடுபவர்களுக்கும்!

● கே. விஜய சதீஷ்சங்கர், சென்னை – 78.

? தமிழ்நாட்டிலுள்ள கோயில் – குளங்களையெல்லாம் நீச்சல் குளங்களாக மாற்றி, நீச்சல் வீரர்களை உருவாக்கப் போவதாக அமைச்சர் தனுஷ்கோடி ஆதித்தன் அறிவித்துள்ளாரே... இது குறித்து தங்களின் கருத்து...?

! அடக்கடவுளே! கோயில் குளங்கள் நீச்சல் குளங்களானால் கோயில்கள் ரெஸ்டாரண்டுகளாகி விடுமா...? பயமாக இருக்கிறதே!

● பாலாஜி, குடந்தை – 1. ❑

? மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய பிரதமரை எம்.எல்.ஏக்கள் அல்லவா தேர்ந்தெடுக்கிறார்கள், நம் நாட்டில்... இது சரிதானா...?

! மேயர் கூட மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிற நிலையில், ஒரு பிரதமர் இப் படி மறைமுகமாகத் தேர்ந்தெடுக் கப்படுவது சரியில்லைதான். சட்டங்கள் சீர்திருத்தம் பெற்றால்தான் இந்த நிலை மாறும்.

● சீதாமகன், மதுரை – 16.

? குஜராத் அரசு டிஸ்மிஸ் ஆனதற்கு யார் முக்கிய காரணம், ஏன்?

! அன்றைய தினம் அனுதாபத் தீர்மானம் மட்டுமே நிகழ்ச்சி நிரலில் இருந்தபோது, அவசரமாக நம்பிக்கைத் தீர்மானத்தை நிறைவேற்ற முயன்றார் முதல்வர் மேத்தா. அவைத் தலைவர் இல்லாத நிலையில், (மருத்துவமனையில் இருந்தார் அவர்) தமக்குச் சாதகமான ஒருவரை இடைக்காலத் தலைவராக நியமித்தார். போதாக்குறைக்கு எதிர்க்கட்சியினர் கலாட்டா செய்தனர் என்று காரணம் காட்டி அவர்களையும் அவையிலிருந்து வெளியேற்றிவிட்டு, நம்பிக்கை தீர்மானத்துக்கு வாக்கெடுப்பு நடத்தியிருக்கிறார்! தட்டிக் கேட்ட பத்திரிகையாளர்களுக்கு போலீஸ் 'கவனிப்பு'! இவ்வளவு அராஜகத்திடையே பெரும்பான்மையை நிரூபித்து என்ன பயன்! உண்மையில் அவருக்குப் பெரும்பான்மை இருந்தும் யானை தன் தலையில் தானே மண்ணைப் போட்டுக் கொண்ட கதையாக ஆட்சி இழந்து நிற்கிறார்!

● நூர்ஜகான் கரீம், மேலப்பாளையம்.

? பிரதமர் தேவேகௌடா சிறப்பாக ஆட்சி செய்கிறார். இப்போதைய சூழவில் பிரதமர் பதவிக்கு அவரே சிறந்தவர்' என்று 'ஜெ' சொல்வது குறித்து...?

! அதே மூச்சில் மறுபக்கம் ப. சிதம்பரத்தையும் கருணாநிதியையும் தாக்குகிறாரே ஜெ! ஐக்கிய முன்னணி அரசை அறுத்து ஆப்பு செருகப் பார்க்கிறார். விர(வா)லை விட்டு நசுக்கிக் கொள்ளாமல் இருந்தால் சரி


• சாயம்...


• ...எப்போது...


• ...வெளுக்கும்...?


• வளர்ப்பு முறை!







# மாலைமதியின் மறுபக்கத்தில் மறைந்திருப்பதென்ன ?

## கண்டு பிடியுங்கள் இந்த நவராத்திரி நாட்களில்.

நவராத்திரி.

நல்லவற்றை பகிர்ந்து, பிறர் நலனையும் போற்றச் சொல்லும் நன்னாள். உற்றார், உறவினர் மற்றும் நண்பரை கண்டு மகிழும் இந்த நாட்களில், உங்கள் வெற்றியின் ரகசியத்தையும் அவர்களுடன் பகிர்ந்து கொள்ளுங்கள். ஆம் ஸ்ரீராம் சிட்ஸ்தான்.

குடும்பத்தில் ஒரு திருமணத்தைத் திட்டமிட்டு, உங்கள் குழந்தையின் மேற்படிப்புக்கு தொகை ஒதுக்கி, திடீரென ஏற்பட்ட மருத்துவ செலவையும் கலங்காது நீங்கள் எதிர்கொள்ள **ஸ்ரீராம் சிட்ஸ்** செய்த உதவியை கூறிடுங்கள்.



இழப்பற்ற, அதிக லாபம் தரும்



# செய்திகள்,

## வாசிப்பது

# செம்பியன்...

**கா**ங்கிரஸ் தலைமையின் போக்கினால் தமிழகத்தில் அக்கட்சி செல்வாக்கு இழந்து, த.மா.கா.வுக்கு வழிவகுத்தது போல அருணாசலப் பிரதேசத்திலும் நடந்திருக்கிறது. காங்கிரஸ் தலைமையின் மூக்கை நுழைக்கும் போக்கும், அவசியமான தருணங்களில் ஒத்துழைப்புத் தராததும் அருணசல முதல்வர் அபாங்குக்கு வேம்பாகக் கசக்க, மிகப் பெரும்பாலான சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்களுடன் புதிய கட்சி அமைத்து, அந்தக் கட்சியின் ஆட்சியையும் கொணர்ந்து, தாமே முதல்வராகவும் ஆகிவிட்டார். ஒரே கல்லில் புதிய கட்சி, ஆட்சி என்ற இரண்டு மாங்காய்களைத் தட்டிக் கொண்டார். காங்கிரஸ், இனியேனும் கட்சியின் மாநிலத் தலைவர்களை அனுசரித்துப் போகக் கற்றுக் கொள்வது நல்லது. இல்லையேல் த.மா.கா.வும், அருணாசல் காங்கிரஸும் தோன்றியது போல், மாநிலத்துக்கு மாநிலம் காங்கிரஸின் மாநிலக் கட்சிகள் உருவாகிக் கொண்டே போகும்.

**"ரா**வ் மீது ஸெயிண்ட் கிட்ஸ் வழக்கு தொடரப்பட்டது; லக்குபாய் வழக்கில் ராவுக்கு முன் ஜாமீன் மறுப்பு; பொய்யை அடையாளம் காட்டும் சோதனையை ஏற்க சுக்ராம் மறுத்து விட்டார்; பதினைந்து பெட்ரோல் பம்புகளை முறைகேடாக ஒதுக்கியது குறித்து, சத்தீஷ் சர்மாவுக்கு உச்சநீதி மன்றம் நோட்டீஸ்; கு.ப. கிருஷ்ணன் கைது; சசிகலாவின் உறவினர்கள் வீடுகளில் ரெய்டு; செங்கோட்டையனுக்கு முன்ஜாமீன் மறுப்பு" என்று அடுத்தடுத்த இரு நாட்களில் ஏராள ஊழல் தொடர்பான செய்திகளைப் படிக்கும்போது, தேசபக்தி உள்ள எவருக்கும், "சே! நம் பாரத நாடு இந்த கதிக்கு வந்து விட்டதே" என்று தோன்றுவது இயல்பு. ஆனால் இந்த அவல நிலையிலிருந்தும் நன்மை விளைய முடியும் என்கிறார் அமெரிக்கப் பத்திரிகையாளர் ஜெர்ரி ஹாக்ஸ்டார்ம். அமெரிக்காவில் வாட்டர் கேட் ஊழலுக்குப் பிறகுதான், "தகவல் பெறும் உரிமை" என்ற சட்டம் நிறைவேற்றப்பட்டது என்பதை எடுத்துக்காட்டும் ஜெர்ரி, அதே போன்ற சட்டம் இங்கும் நிறைவேறினால் பெரும் முன்னேற்றம் ஏற்படும் என்கிறார். அமெரிக்காவில் பத்திரிகை சுதந்திரம் ஏற்கெனவே இருந்த போதிலும் "தகவல் பெறும் உரிமை" சட்டமானது வாட்டர்கேட்டுக்குப் பிறகு நிறைவேறியதால், அரசு அதிகாரிகளோ, ஆட்சியில் உள்ள அரசியல்வாதிகளோ எந்தத் தகவலையும் மறைக்க முடியாது. (ராணுவ, பாதுகாப்பு ரகசியம் தவிர.) மக்களோ, அல்லது அவர்கள் சார்பில் நிருபர்களோ கேட்கிற தகவல்களைத் தந்தே ஆக வேண்டும். மறைத்தால் கடும் தண்டனை என்கிற நிலை! இந்தச் சட்டத்தை இங்கும் ஐ.மு. அரசு நிறைவேற்றினால் ஜனநாயகத்துக்கு மிகப் பெரிய சேவை செய்ததாகும்.

**பே**னசிருக்கும் அவரது சகோதரர் முர்டாஸாவுக்கும் இடையே அன்பு தட்டுக் கெட்டுப் போகவில்லை என்பது அனைவரும் அறிந்தது. முர்டாஸா, கட்சிக்குள் தனியே ஓர் எதிர் அணி தொடங்கி, பேனசிருக்கும் அவரது கணவருக்கும் தலைவலி கொடுத்து வந்தார். திடுமென அவர் போலீசாருடன் ஒரு கைகலப்பில் சுட்டுக் கொல்லப்பட்டதானது, பேனசிர் மற்றும் அவரது கணவர் ஸர்தாரி மீதுதான் சந்தேகத்தை எழுப்பும். ஆனால் பேனசிரோ தமக்கும் தமது சகோதரருக்கும் இடையே வேற்றுமைகள் குறைந்து வந்ததாகவும் எங்கே மீண்டும் இரு அணிகளும் இணைந்து விடுமோ என்ற பயத்தில் சதிகாரர்கள் இப்படிச் செய்து தம்மீது பழிபோட எண்ணுகிறார்கள் என்றும் கூறியிருக்கிறார். முர்டாஸா அணியினரோ, 'பேனசிரின் கணவர்தான் இந்தப் படுகொலையின் பின்னணியில் இருப்பவர்' என்கின்றனர். விசாரணை கமிஷன் நியமிக்கப்பட்டுள்ளது. ஆனால் பாக். போலீஸார், 'தங்களைத் தாக்கிய முர்டாஸா அணியினர் இந்தியாவின் உளவுப் படையினரால் பயிற்றுவிக்கப்பட்டவர்கள்' என்று ஒரு கதை கட்டி விடுவதைப் பார்க்க, உண்மைகள் வெளிப்படும் என்ற நம்பிக்கை யாருக்கும் இல்லை.

• ரவீனா டாண்டன்

"கொஞ்ச நேரம் என்னை சும்மா உட்ரு இஷ்டா. நீ போய் எங்கனா சுத்திட்டு வா. இப்ப ரொம்ப ஃபீலிங்ல இருக்கேன்" என்றான், தண்டபாணி.

சுலபமாக யூகித்தேன். சில்க் ஸ்மிதா மரணம், காரணம் என்று.

"எத்தனை லட்சம் சம்பாதிச்சி என்ன? மனுஷனுக்கு வாழ்க்கைல நிம்மதி மட்டும் இல்லாட்டி எப்ப டியெல்லாம் ஆயிடுது பாத்தியா?" என்றான் வருத்தத்துடன்.

மேற்கொண்டு நான் பேசுவதற் குள் "இங்க நின்னு டயம் வேஸ்ட் பண்ணாதே. ஏவி.எம். போ. நிறைய





• நிவேதிதா

பொங்கலோரப் பறவை :

சமாசாரம் நடக்குது. பாத்துட்டுத் திரும்பி வா. மூட் இருந்தா பேச றேன்" என்றான்.

ஆகவே, என் குதிரை யைத் தட்டி விட்டேன் சவாரி, ஏவி.எம்முக்கு.

கலர் கலராகத் தோரண மெல்லாம் கட்டி நிறைய கார் களும் ஃபிளாஷ்களுமாக ஏவி ஃப்ளோர் வாசல் ஜொலித்துக் கொண்டிருக்க, எவர்சில்வர் தம்ளர் களில் காப்பி காப்பியாகப் போய்க் கொண்டிருந்தது.

ஏதோ பூஜை என்று அப்பால் போகப் போன போது, என் உயரம் போல் இரண்டு பங்குக்கு இருந்த ஒரு பெண் வசீ கரம் புதிதாகக் கண்ணில் பட, இது யாரடா புதுமுகம் என்று நின்று பார்த்தேன். பார்த்

# முதல் படம் நடிக்கும்போதே இரண்டாவது படம்...

# எறும்பார் கடிக்கிறார்....

**"ஆவதும் கேபிள் டி.வி.யாலே அழிவதும் கேபிள் டி.வி.யாலே என்று சொல்லும் அளவுக்கு இன்று கேபிள் டி.வி. இருக்கிறது. எனவே அது நல்ல முறையில் பயன்படுத்தப்பட வேண்டும். எங்களுடைய ஆதரவு எப்போதும் இருக்கும்...."**

**– மு.க. ஸ்டாலின்**




●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

தது போலவும் பார்க்காதது போலவும் இருந்த அந்த முகத்தின் பெயர் சட்டென்று ஞாபகம் வந்தது. நிவேதிதா. 'தாயின் மணிக்கொடி'யில் நடிக்கிற பெங்களூர்ப் பறவை என்று தண்டபாணி சொன்னது ஞாபகம் வர, கிட்டே போய்க் கடமையைத் தொடங்கினேன்.

"முதல் படத்தோட ஷூட்டிங் முப்பது பர்சென்ட் கூட முடியாத நிலையில, அடுத்த படம் புக் ஆன நடிகை வேற யாரையாவது பார்த்திருக்கீங்களா?" என்றபோது இல்லை என்று சத்தியம் செய்தேன்.

"இது யார் படங்க மேடம்?"

"தெனாலி ராஜா. செல்வா படம்."

"ஹீரோ?"

"ஹி ஹி. அர்ஜுன்."

"அதானே பார்த்தேன்!" என்று சொல்லவில்லை. நினைத்துக் கொண்டேன்.

அர்ஜுன் இப்படி புதுப்புது ஹீரோயின்களாகப் பார்த்துக் கொண்டிருக்க, (இதே படத்தில் ரவீனா டாண்டன் வேறு.) இதனால் பெரிதும் பாதிக்கப்பட்டவராகத் தெரிந்தார் அன்னாரது (முன்னாள்) ஆஸ்தான ஹீரோயின் ரஞ்.

வெள்ளை அம்பாஸிடரில் சிவப்புப் புடைவை கட்டி படு பயங்கர மேக்கப் ஜாலங்களுடன் அவர் வந்து, நின்று, சென்ற போதும் அந்த முகத்தில் தெரிந்த ஏக்கமென்ன! முறுவலில் நெளிந்த சோகமென்ன!

தெனாலிராஜா பற்றி சில குறிப்ஸ் :

1. முழுநீள காமெடிப் படம் – சார்லி சாப்ளின் ரேஞ்சுக்கு சிரிக்க வைக்கப் போகிறோம் என்று யூனிட்காரர்கள் வீர சபதம் எடுத்திருக்கிறார்கள்.

2. கமலின் ஆஸ்தான ரைட்டராக இருந்து அருணாச்சலம் மூலம் ரஜினிக்குத் தாவியிருக்கும் கிரேஸி மோகன்தான் இதற்கு வசனம். (மனுஷனைப் பார்க்க வேண்டுமே, பல்லெல்லாம் வாய்!)

3. பூஜையில் பலரும் ஆவலுடன் எதிர்பார்த்த ர. டாண்டன் காணவில்லை.

4. படம் பொங்கலுக்கு வரப் போகிறது.

அதே ஏவிஎம்மின் வேறொரு தளத்தில் கச்சடாவாக மரம் அறுக்கும் சப்தம் போல டேப்ரிகார்டரில் கேட்டுக் கொண்டிருக்க, எட்டிப் பார்த்தால் 'தினமும் என்னைக் கவனி' என்றார்கள். (படத்தின் பெயராம்.)

விசேஷமாக ஏதும் காணோமே என்று வெளியே புறப்பட்ட சமயம், குடுமி வைத்துக் கொண்டு அரபுக் குதிரை போல தரையை உதைத்து வந்தார் ஒரு மனிதர். அடையாளம் பிடிக்க ஒருசில விநாடிகள் ஆயின. அட, பிரகாஷ்ராஜ்!

"ரொம்ப தேங்க்ஸ் சார்! பிரியம் பட விமர்சனத்துல கல்கி என்னை எங்கேயோ தூக்கி வெச்சிருச்சி! தேங்க்யூ" என்றார் பூரிப்புடன்.

"ஆனா உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? அந்தப் படத்துல நடிக்கறதுக்காக நான் மில்லி மீட்டர் கூட ஸ்ட்ரெயின் பண்ணிக்கலை! படு கேஷுவலா வந்தேன், நின்னேன், போனேன். என்னைப் பொறுத்தவரைக்கும் அதுல நடிச்சது ஒண்ணுமே இல்லை. பாலசந்தரோட 'கல்கி' வரட்டும் பாருங்க, பின்னியிருக்கிறார் மனுஷன்" என்று புல்லரித்தார்.

"அதிலும் வில்லன்தானா?"

"ஆமாம்! எனக்கு ஹீரோ – வில்லன் வேறுபாடெல்லாம் கிடையாது. நடிகனா இருக்கணும். அவ்ளோதான்." (பாயின்ட்!)

பிரகாஷ்ராஜிடம் கறந்த சில விஷயங்கள் :

1. 'டூயட்' பார்த்து பாலசந்தரைக் கிண்டலடித்தவர்கள் 'கல்கி' வந்ததும் காலில் விழுந்து விடப் போகிறார்களாம். ("இந்த வயசுல அந்த மனுஷன் யோசிக்கற விதத்தைப் பார்த்தா நாமெல்லாம் பூச்சி!")

2. 'தினமும் என்னை கவனி'யில் ராம்கியுடன் சங்கவி ஜோடி. இவர் வழக்கம் போல் வில்லன். ("வாழ்க்கையிலேயே முதல் தடவையா ஒரு பொண்ணு பின்னால சுத்தாத வில்லன் ரோல் இந்தப் படத்துலதான்!")

3. கிருஷ்ணா ரெட்டியின் ஒரு தெலுங்குப் படத்தில் 65 கொலைகள் செய்கிற ரோலில் நடித்த அனுபவத்தை மறக்கவே முடியாது என்கிறார். ("ஆனா க்ளைமாக்ஸ்ல நான் சாகறப்ப ஜனங்க அழுற அளவுக்கு என் கேரக்டர் மக்களோட ஒன்றிப் போயிடும்!")

நமது கமெண்ட் : கஷ்டம்டா!

'சமீபத்தில் நீங்கள் பார்த்து பிரமித்த விஷயம் எது?' என்று 'தராசு'க்கு நிறைய

கேள்வி வரும்.

என்னிடம் அப்படி யாரும் கேட்கவில்லை என்றாலும் சொல்ல வேண்டியது என் கர்த்தவ்ய. (அதாங்க கடமை)

பிரசாத் ஸ்டூடியோவில் உல்லாசம் படத்தில் வரும் ஒரு பாட்டுக்காக தோட்டாதரணி ஒரு செட் போட்டிருக்கிறார். இருங்கள், முடிந்த வரை வர்ணிக்கிறேன்.

பழங்கால அரசர் மாளிகை மாதிரி என்ட்ரன்ஸ். நுழைந்ததும் பிரும்மாண்டமான சவுக்கு, வேப்பமரங்கள். (வேரோடு, கிளையோடு) இடது பக்கம் ஒரு செல்லரித்த இரும்புத் தூண். அதில் குட்டிக் குட்டியாக நூறு சிற்பங்கள். அங்கே ஒரு குன்று. இங்கே ஒரு புதர். நடுவில் ஹோவென்று புல்வெளி, புல்வெளி.

ஒருகணம் பிரசாத்திலிருந்து டைம் மெஷின் மூலம் காங்கோ காடுகளுக்குப் போய் விட்டது மாதிரி பிரமை. அத்தனை தத்ரூபம்.

"எப்படி சார் முடிஞ்சது?" என்று டைரக்டரிடம் கேட்டேன்.

"பதிமூணு நாள் தரணி, பசி தூக்கமில்லாம உழைச்சிருக்கார், சும்மாவா?" என்றனர் ஜேடியும் ஜெர்ரியும்.

"என்ன செலவாயிற்று?" என்று கேட்டதற்கு நோ ரிப்ளை.

மகேஸ்வரியைப் பிடித்துக் கொண்டு விக்ரம் பிஜிஎம்முக்கு ஆட ஆரம்பிக்க, அதில் மூழ்கியே போய் விட்டார்கள்.

இந்த செட்டின் ஸ்டில் கிடைக்குமா என்று கேட்டதற்கு, பாட்டு முழுக்க எடுத்து முடிந்ததும் தருகிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள். இரண்டு வாரம் கழித்து ஞாபகப்படுத்துங்கள். கேட்டு வாங்கிப் போடுகிறேன்.

**ஊ**ர் உலகையெல்லாம் சுற்றி விட்டு நான் தண்டபாணியைப் பார்க்கப் போன போது மணி பிற்பகல் இரண்டு.

"ரூமுக்கு வந்துட்டியா தண்டபாணி? ஏதாவது சமாசாரம் உண்டா?" என்றேன்.

"ஒரே ஒரு நியூஸ்தான். மிச்சமெல்லாம் அடுத்த வாரம். பிரபுதேவாவுக்கு, அடுத்து வர்ற 'மிஸ்டர் ரோமியோ'தான் அவர் வருங்காலத்தைத் தீர்மானிக்கப் போற படம். உயிரைக் குடுத்து நடிச்சிட்டிருக்கார். முன்ன மாதிரி கதை விவகாரங்கள்ல மூக்கு நுழைக்கறதெல்லாம் இல்லையாம். தன் வேலையை மட்டும் கரெக்டா முடிச்சிக் குடுத்துடறார்னு கேள்வி. தீபாவளிக்கு ரிலீஸாகிற இந்தப் படம் ஜனவரி எண்டு வரைக்கும் ஹவுஸ்ஃபுல்லா ஓடினாத்தான் மேற்கொண்டு படவாய்ப்புகள் வரும்னு விநியோகஸ்தர்கள் பக்கத்துல பேச்சு."

"படம் ஆனவரைக்கும் எப்படி வந்திருக்காம். உனக்கு ஏதாவது நியூஸ் வந்திருக்குமே?"

"கேள்விப்பட்டேன். காதலன் அளவுக்கு சிறப்புன்னு சொல்ல முடியாது. லவ்பேர்ட்ஸ் அளவுக்கு மோசம்னும் சொல்ல முடியாது. சுமாரா இருக்குன்னு யூனிட் ஆள் ஒருத்தன் சொன்னான்."

"ரெண்டுங்கெட்டான்ங்கற பதத்தோட அருஞ்சொற்பொருள் இதான்னு நினைக்கறேன். சரி, வரவா? நெக்ஸ்ட் வீக் நீ நல்ல மூட்ல இருக்க ஆண்டவனை வேண்டிக்கறேன்!"

- கிச்சா



"என்னைப் பார்த்தாலே இன்ஸ்பெக்டரய்யாவுக்குப் பொறாமை!"

"ஏன்?"

"அவர் தொப்பையை விட என் தொப்பை பெரிசா இருக்கே!"

— எஸ். இராஜேந்திரன்



சீடன் : எல்லாம் அநித்யம் கறீங்களே! நிரந்தரமானதுன்னு எதுவும் இல்லையா குருவே?

குரு : ஏன் இல்லை? செருப்புத் திருடற ஜோக்கும் மாவட்டற ஜோக்கும் என்றும் சிரஞ்சீவியானவை!"

— ந.. ராஜாஜி



"காசில்லாத போது என்னையும் எதுக்குப்பா டிபன் சாப்பிடக் கூப்பிட்டே?"

"மாவாட்டும் போது சும்மா, ஒரு பேச்சுத் துணையா இருக்குமேன்னுதான்...!"

— ஆர். வசந்தகுமார்

# உன்னை வெல்லாதா? 10

**வா**சலில் பன்னீர் மரம் இருந்தது. இதமான மணத்தைப் பரப்பிய அதன் வெள்ளைப் பூக்கள், ஓரிரண்டு குரோட்டன்ஸ் செடிகள், பழைய துளசி மாடம், சாம்பல் வண்ணத்தில் பெயின்ட் அடித்த கதவு, ஜன்னல்கள்...

பளபளத்த புதிய ஃபிளாட்டுகள் அரை டஜனுக்கு மேல் பார்த்திருந்தபோதும் சுகன்யாவுக்கு இந்த வீடுதான் பிடித்திருந்தது. பெருங்காய டப்பி போல் அடக்கத்துடன் மூன்று அறைகள், ஒரு சமையல் கட்டு, கொல்லைப்புறத்தில் துவைக்கும் கல், தென்னை மரங்கள், அவற்றில் வீறிட்ட அணில்கள் என்று ஒவ்வொன்றையும் ரசித்து மனத்தில் வாங்கிக் கொண்டாள்.

மேல் தளத்து மொட்டை மாடிக்குப் போக வெளியே, தனியாகப் படிக்கட்டு இருந்தது. "பௌர்ணமி நாட்களில் இங்கேயே படுத்துத் தூங்கலாம்... இல்ல ஸ்ரீராம்...?"

"படுத்துக்கலாம்... ஆனா தூங்க முடியுமான்றது சந்தேகம்தான்..."

கண்களில் குறும்புடன் பதில் சொன்னான் ஸ்ரீராம்.

சுகன்யா சிரித்தாள். நீண்ட நாட்களுக்குப் பிறகு மனம் மிக இலேசாக இருந்தது. பன்னீர்ப் பூக்களின் வாசனையை நெஞ்சு நிரம்ப சுவாசித்துக் கொண்டாள்.

**பெ**ற்றோரிடம் தனிக்குடித்தன திட்டத்தை வெளியிட்ட ஸ்ரீராம், தயக்கமின்றி வந்த அவர்களின் ஆசிகளைக் கேட்டு அசந்து போனான்.

"நானே உங்கிட்ட சொல்லலாமான்னு இருந்தேன்டா ஸ்ரீராமா..." என்று அப்பாவும், "நன்னா போயிட்டு வாங்கோ. வீட்டைப் பார்த்துட்டுச் சொல்லு, நாள் குறிச்சுத் தர்றேன்" என்று அம்மாவும் சொன்னதை சுகன்யாவிடம் தெரிவித்து ஆச்சர்யப்பட்டான்.

"எனக்கு இது ஆச்சரியமாகவே தெரியலை ஸ்ரீராம்..."

"என்ன சொல்றே...?"

"அவங்களைப் பொறுத்தவரைக்கும் ஒரு பெரிய இடைஞ்சலை வழியை விட்டு நீக்கியாச்சு..."

"நோ! நோ! அப்படியெல்லாம் நினைக்காதே..."

"இல்லை ஸ்ரீராம்! உண்மையைச் சந்திப்போமே... அவங்க கெட்டவங்கன்னு நான் சொல்லலை. ஆனா, என்னை அவங்களால ஏத்துக்க முடியலைங்கறது மறுக்க முடியாத உண்மை. உங்க அப்பா ரொம்ப நேர்மையானவர். அவ்வளவு தூரம் நாம பழகின பிறகு பிரிக்கறது நியாயமில்லைன்னு நினைச்சிருக்கார். அதனால்தான் நம்ம கல்யாணத்தை அப்படி அவசரமா நடத்தி வைச்சிருக்கார். அம்மாவும் அவர் பேச்சைத் தட்ட முடியாம சம்மதிச்சிருக்காங்க. ஆனா மனசளவிலே அவங்களால் என்னோட நெருங்க முடியலை... நீ தனிக் குடித்தனப் பேச்சை எடுத்ததும் கும்பிடப் போன தெய்வம் குறுக்க வந்த மாதிரி சந்தோஷப்பட்டிருக்காங்க... இந்தக் காரியம் சுலபமா முடிந்தது அவங்க பெருந்தன்மையினாலேன்னு, நம்மளை நாமே ஏன் ஏமாத்திக்கணும்...?"

"சில சமயம் நீ ரொம்ப அதிகமா யோசிக்கறியோன்னு படறது சுகி... வேண்டாமே! இப்படி ஏன் மூளையையும் மனசையும் போட்டு வருத்திக்கறே...? நடக்கிற விஷயங்களை அப்படியே, சாதாரணமா ஏத்துக்கக் கூடாதா...?"

"என்னால அது முடியாது ஸ்ரீராம். அப்பா - அம்மா சீக்கிரமா போய்ட்டதாலே, சின்ன வயசுலேர்ந்தே முக்கியமான முடிவுகளையெல்லாம் நானேதான் எடுக்க வேண்டி வந்துருக்கு. அந்த மாதிரி சமயங்கள்ல இப்படிக் காரண காரியங்களை யோசிச்சு எனக்குள்ளே ஒரு தெளிவு ஏற்படுத்திக்கப் பழகிண்டுட்டேன்..."

ஸ்ரீராம் அவள் நெற்றிப் பொட்டுகளில் விரலால் அழுத்தி நீவினான்.

"ரிலாக்ஸ்..."

"ஊம்..." என்று கண்களை மூடிக் கொண்டாள். "நாளைக்கே வீடு வேட்டையை ஆரம்பிச்சுடுவேன்..."

**சொ**ன்னவள், செயலிலும் இறங்கி இதோ - ஒரு வார இறுதியில் இந்த ஷூ பெட்டி வீட்டைப் பிடித்திருக்கிறாள்.

? பட்டுக்கோட்டை பிரபாகர்

'ஷூ பெட்டி' என்ற ஸ்ரீராமின் கிண்டல் அவளுக்குப் பிடித்திருந்தது.

''அதோட வசதி வேறெதுலயாவது வருமா...? கோணல் - மாணல் இல்லாத, சந்து பொந்து இல்லாத, அனாவசிய அலங்காரங்கள் இல்லாத உன்னை மாதிரி!''

''சமையலறை ரொம்ப பழங்காலத்துக் கட்டுமானமா இருக்கே...?''

''அதனாலென்ன? எனக்குப் பிடிச்சிருக்கு... கொஞ்சம் ப்ளீச்சிங் பவுடர். ஆசிட், இரண்டு துடைப்பம், பிரஷ்... இது இருந்தாலே இந்த வீட்டை அடையாளம் தெரியாம ஆக்கிடுவேன்.''

அவன் தேய்க்க, அவன் கழுவினான்.

''ரொம்ப நெடி... ஆனாலும்...'' என்று ப்ளீச்சிங் பவுடரைப் போட்டுக் குழைத்த போது கர்சீப்பால் அவள் மூக்கையும் வாயையும் மூடி, கட்டி விட்டான். வியர்க்க, வியர்க்க இருவரும் உழைத்ததில் வீடு சுத்தமானது.

**சா**ல்டிரிங் வாங்கி வந்தவன், வாஷ்பேஸின் கழுவிக் கொண்டிருந்தவளை இழுத்து வந்து ஃபேன் அடியில் உட்கார வைத்தான். இரண்டு கைகளிலும் சோப்பு



## தங்க நகை பரிசு!

இந்த இருபத்தாறு வாரத் தொடர் ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்குத் தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

நுரைத்திருக்க, மூக்கைச் சுற்றி அவன் கட்டிய துணிக்கு மேலே அவன் கண்கள் சிரித்தன.

கர்சீப்பைத் தூக்கிப் பிடித்து ஸ்ட்ரா அடங்கிய பாட்டிலை அவள் வாயருகே கொண்டு போனான்.

புறங்கையால் பாட்டிலைத் தள்ளிவிட்டவள், "ஊஹூ'ம்... முதல்ல..." - உதடுகளைக் குவித்து அவனுக்கு அழைப்பு விடுக்க, கூல் ட்ரிங்க் பாட்டிலைக் கீழே வைத்துவிட்டு, ஆனந்தமாய் அதை ஏற்றுக் கொண்டான் ஸ்ரீராம்.

பால் காய்ச்சி குடித்தனம் வைக்க அப்பாவே நாள் பார்த்துச் சொல்லியிருந்தார்.

அம்மா, ஒரு செட் புது ஸ்டீல் அடுக்குகளும், பரண் மேலிருந்து சில பெரிய பாத்திரங்களும் கொடுத்தாள்.

''இவ்வளவு பெரிய பாத்திரம் எங்க இரண்டு பேருக்கு எதுக்கும்மா....?'' அந்தச் சிறிய வீட்டில் அதைக் கட்டிக் காப்பது குறித்த கவலையுடன் சுகன்யா கேட்டாள்.

''ஸ்ரீராமனுக்குச் சேர வேண்டியதுதான் இதெல்லாம்... வசந்தி, குமாரோடதுன்னு வேற தனியா பிரிச்சு வைச்சிருக்கேன்.''

புத்தகங்களுக்கு மட்டுமேயான இரு மரப் பெட்டிகள் போக, நான்கு சூட்கேஸ்களில் சுகன்யா - ஸ்ரீராம் இருவரின் மொத்த உடைமைகளும் அடங்கிவிட்டன. பித்தளை தவலையும், வெண்கல குண்டானும் மட்டும் எதிலும் அடங்காமல் துருத்திக் கொண்டு நின்றன.

இரவு சாப்பிட்டபோது மாமியார் பரிமாற, 'இந்த வீட்டில் உண்ணும் கடைசி வேளை உணவு இது' என்பது சுகன்யாவுக்கு உறைத்தது.

'அவர் இதுவரை வெளிப்படுத்தி அறியாத ஆதுரம் இப்போதாவது தென்படுகிறதா...?'

''தட்டில் மோர் பரிமாறியவரிடம், ''போதும்மா...!'' என்று சொல்லி, அவர் கண்களை நிமிர்ந்து பார்த்தாள் சுகன்யா.

சரஸ்வதியின் கைகள் இவள் இலைக்குப் பரிமாறினாலும் கண்கள் ஸ்ரீராமின் பேரில்தான் இருந்தன. அந்தக் கண்களின் ஓரத்தில் இரு நீர்த் துளிகள் மினுமினுப்பதையும் பார்த்தாள். அவற்றின் பின்னேயிருந்த வேதனை தாக்க, சுகன்யாவின் கண்களிலும் இரு நீர் முத்துக்கள் திரண்டு கொண்டன. ஸ்ரீராம் கூட கஷ்டப்பட்டே சோற்றை விழுங்குவதாகத் தெரிந்தது அவளுக்கு.

மற்றபடி, வீடு எப்போதும்போல் ஒன்பது மணிக்கு விளக்கணைத்து உறங்கத் தயாரானது.

வசந்தி மட்டும் அவர்களுடைய படுக்கையறை வாசலுக்கு வந்து நின்றாள். அறை

---

''டேய் ராகவா, ராமர் பிள்ளை தண்ணீர்ல மூலிகையைக் கலந்து பெட்ரோல் கண்டு பிடிச்சிருக்காராம்!''

''இதென்னடா பிரமாதம். என் மனைவி தண்ணீர்ல சர்க்கரையையும் காபிப் பொடியையும் கலந்தாள்னா மண்ணெண்ணெய் மாதிரி இருக்கும். ஆனா அதை நாங்க வெளியில பிரபலப்படுத்திக்கலை. அவ்வளவுதான்!''

– ஔவை யோகானந்தம்





''பினாமிகளோட மதிப்பு வெகுவா உயர்ந்து போச்சு, போங்க.''

''எப்படிச் சொல்றீங்க?''

ஒருலட்ச ரூபாய்க்கு பினாமியா இருக்கீங்களான்னு ஒரு ஆசாமியைக் கேட்டதுக்கு, 'கோடின்னா பேசுங்க...'ன்னு கறாரா சொல்லி அனுப்பிட்டானே!''

– சீர்காழி வி. ரேவதி

காலியானதில், பெரிதாகத் தெரிந்தது.

''இப்பவே வெறிச்சோடியிருக்கு.... நாளைக்கு நீங்க போனப்புறம் எப்படியிருக்குமோ...?''

''பழகிப் போயிடும் வசந்தி... வருத்தப் படாதே'' – சுகன்யா சொல்லிக் கொண்டிருந்த போதே ஸ்ரீராம், தங்கையின் தோள்களை அணைத்து, பக்கத்தில் தரையில் உட்கார வைத்துக் கொண்டான்.

"வசந்தி... நீ வந்து எங்க கூட இருக்கலாம்... அப்புறம் உன் கல்யாணம் நிச்சயமானா நாங்க ஓடி வந்துடமாட்டோமா...? இப்படிக் கலங்கக் கூடாது...''

"நான் ஏன் கலங்கறேன்...?" என்ற வசந்தி, அண்ணாவின் தோள்களில் சரிந்து விசும்ப ஆரம்பித்த நேரம் போன் அடித்தது.

ஓடிப்போய் எடுத்த சுகன்யா, "It's for you from office" என்று ஸ்ரீராமை அழைக்க, அவன் வசந்தியை மெள்ள விடுத்து எழுந்து போனான்.

''தைரியமா இரு வசந்தி... படிக்கற பொண்ணு... இப்படிக் கலங்கக் கூடாது... உன்னைப் பிரியணும்ங்கறதுக்காக இப்போ நாங்க போகலை... இந்த ஏற்பாடுதான் எல்லாருக்கும் சௌகரியமான, சந்தோஷமான ஏற்பாடா இருக்கும்னு முடிவானதுனால போறோம்...''

வசந்தி ஒரு குழந்தையைப் போல் 'ஊம்' கொட்டினாள்.

"நாளைக்கு உனக்கே கல்யாணமாகும்... அப்ப நீ போகற இடத்துல உன்னை எப்படி ஏத்துப்பாங்கறதைப் பத்தி ரொம்ப பெரிய எதிர்பார்ப்பு வைச்சுக்காம இருக்கறதே நல்லது... திறந்த மனசோட போனா, எப்படிப்பட்ட மனுஷங்களையும் ஏத்துக்கலாம்... அப்படிப்பட்ட சூழ்நிலைக்கு பழகிக்கலாம்..."

மெய்யாகவே நட்புணர்வு மேலிடத்தான் பேசினாள் சுகன்யா.

பதிலுக்கு வசந்தியின் கண்களில் மின்னல் வெட்டாகக் கோபம் பளிச்சிட்டது.

"சும்மாயிருங்க மன்னி... உங்களை மாதிரி 'லவ் மேரேஜ்' ஆனாத்தானே அந்தக் கவலையெல்லாம் படணும்... எனக்கு அப்படியெல்லாம் ஒரு பிரச்னையும் வராது. ஏன்னா அப்பா – அம்மா என்னை ஏத்துக்கக்கூடிய ஒரு குடும்பமா பார்த்துத்தான் எனக்குக் கல்யாணம் பண்ணி வைப்பாங்க..."

'விட்டேற்றியாக விழுந்த சொல்லடி பலமானதுதான்' என்று நினைத்துக் கொண்டாள்.

(தொடரும்)



## ஒதுக்கீட்டில் படும்பாடு!

பெண்களுக்கு 33சதம் கட்டாய ஒதுக்கீடு பல விசித்திரமான பிரச்னைகளை ஏற்படுத்தி இருக்கிறது. கர்னாடகத்தில் ஒரு கிராமத் தலைவி பதவி தலித் பெண்ணுக்கென ஒதுக்கப்பட்டது. ஒருவரும் முன்வரவில்லை. கங்கவ்வா என்ற பிச்சைக்காரியைக் கட்டாயப்படுத்தித் தேர்ந்தெடுத்து விட்டனர். பதவியின் கௌரவத்தைக் காப்பாற்ற இனி அவர் பிச்சையும் எடுக்கக் கூடாதென்கிறார்கள். மூன்று குழந்தைகளுடன் அவர் பட்டினி கிடக்கும் நிலை. ஹொன்னாலியில் ரத்னம்மா என்பவர் ஜெயித்த பிறகுதான் எந்தக் கட்சியின் சார்பாக அவர் நிறுத்தப்பட்டார் என்ற விவரமே அவருக்குத் தெரிவிக்கப்பட்டது. செல்லகரெ தாலுகாமன்றத் தலைவியாக சகுந்தலம்மா தேர்ந்தெடுக்கப்பட்டதும் அவர் பத்திரிகையாளர்களிடம் தம்மைப்படம் பிடிக்க வேண்டாமென்றும் தம் கணவரின் படத்தையே பத்திரிகைகளில் போடும்படியும் வேண்டிக் கொண்டார்.

–ஜெயந்தி நடராஜன் எம்பி. ''ஹிந்து''– கட்டுரை.

தகவல் : அ.ஷண்முகசுந்தரம்

''அப்பா! அடிக்கடி எதிர்த்த வீட்டு குரு என்னை கிண்டல் பண்றாம்பா...''

''என்னன்னு?''

''சீக்கிரம் வா, குடும்ப அரசியல் நடத்தலாம்ங்கிறான்!''

– பழங்கூர் மீரா–முருகன்



# குமுறல்

●● தில்லி தொலைக்காட்சி, செய்திகளின் இறுதியில், பெரு நகரங்களின் வெப்ப அளவைக் குறிக்கும்போது, 'மும்பை' என்று எழுதுகிறது. ஆனால் 'சென்னை' என்பதை ஏற்காமல், 'மெட்ராஸ்' என்றே குறிப்பிடுகிறது. ஏன் இந்த ஓரவஞ்சனை?

கும்பகோணம்,
சித்ரா கிருஷ்ணமூர்த்தி.

●● தனியார் பள்ளிகளுடன் ஒப்பிட, அரசுப் பள்ளிகள் கல்வி கற்பிப்பதில் மிகவும் பின்தங்கியுள்ளன. செலவு அதிகமானாலும் பெற்றோர் தங்கள் குழந்தைகளைத் தனியார் பள்ளியில் சேர்ப்பதையே விரும்புகின்றனர். இந்நிலை மாற, அரசுப் பள்ளிகளில் பணியாற்றும் ஒவ்வொரு ஆசிரியரும் இதைத் தன்மானப் பிரச்னையாகக் கருத வேண்டும். பெற்றோரும் வாரம் ஒருமுறையாவது தங்கள் பையன் எப்படிப் படிக்கிறான் என்று ஆசிரியரிடம் கேட்டு வர வேண்டும். அப்போதுதான் ஏழை மாணவர்கள் ஏற்றம் பெற முடியும்.

கோபாலசமுத்திரம், இர. ரூபன்.

●● என் உறவினர் ஒருவர் வீட்டில் தொலைபேசி வசதி செய்து கொண்டார். ஆகஸ்டு 96-ல் முதன் முறையாக தொலைபேசி பில் வந்து உரிய காலத்தில் கட்டி ரசீதும் பெற்றாகி விட்டது. ஆயினும் திடீரென்று ஒரு நாள் 'கட்டணம் செலுத்தவில்லை' என்று போன் தொடர்பு துண்டிக்கப்பட்டது. இந்தச் சமயத்தில் குடும்பத் தலைவரான எனது அந்த உறவினர் இறந்து விட்டார். தொலைதூரத்தில் ஃபோன் வசதியுடன் இருந்த அவரது பெண், பிள்ளைகளுடன் அவரது மனைவியால் தொடர்பு கொள்ள முடியவில்லை. உடன் தகவல் தெரிவிக்கவோ ஆறுதல் பெறவோ இயலவில்லை. அரசு ஊழியர்கள் கடமை உணர்வுடன் நேர்த்தியாகச் செயல்படாததால் எவ்வளவு துன்பம்!

வேலூர், ஜி. சீனிவாசமூர்த்தி.

## குடிநீர் இல்லாத மருத்துவமனை!

●● மருத்துவமனையில் போதுமான குடிநீர் வசதி கூட இல்லை. நோயாளிகள் குடிநீருக்காக அலையும் சூழ்நிலைதான் உள்ளது. அரசு உடனடி நடவடிக்கை எடுக்குமா?

விசலூர், ஜி. ஜி. கிருஷ்ணன்.

●● தஞ்சை மாவட்டத்தில் ஒருகால பூஜைக்குக் கூட வழியில்லாமல் ஆயிரக்கணக்கான ஆலயங்கள் அழிந்து கொண்டிருக்கின்றன. குத்தகைக்காரர் பாதுகாப்புச் சட்டம் வந்ததிலிருந்து ஆலயங்களுக்குக் கால் படி நெல் கூட கிடைப்பதில்லை. என் பாட்டனார் சிவன் கோயிலுக்குச் சென்றால், "விபூதி பிரசாதத்தைக் கூட பொட்டலம் கட்டி வீட்டுக்குக் கொண்டு வரக்கூடாது; அது சிவன் சொத்து" என்று கூறுவார். இன்றோ, கோயிலையே பெயர்த்தெடுத்து விற்று விடுவார்கள் போலிருக்கிறது.

திரிபுவனம், கே.ஆர். குமரேஷ்.

●● சன் டி.வி. நேருக்கு நேர் நிகழ்ச்சியில் தி.க. தலைவர் ஆனூர் ஜெகதீசனுடன் பேட்டி. அப்போது பேட்டி கண்டவரும் காணப்பட்டவரும் ஜெயலலிதாவை "பாப்பாத்தி" என்றே பலமுறை குறிப்பிட்டனர். இது போல் முற்பட்ட வகுப்பினர் ஜாதி குறிப்பிட்டுப் பேசினால் இவர்களால் பொறுக்க முடியுமா?

ஸ்ரீரங்கம், சத்யா சீனிவாசன்.

●● பா.ம.க. மாவட்ட செயலாளர் கைது செய்யப்பட்டார் என்பதற்காக, பா.ம.க.வினர் சேத்தியாதோப்பில் சாலை மறியல் செய்ய, இந்த வழி செல்ல வேண்டிய பஸ்கள், சிதம்பரம் வழியாகச் சென்றதில் ஏகப்பட்ட காலதாமதம் ஆயிற்று. போலீஸார் அவரைக் கைது செய்தது சரியோ தப்போ, அதை அரசியல்ரீதியாகவும் நீதிமன்றம் மூலமாகவும்தான் தீர்த்துக் கொள்ளவேண்டுமே தவிர, பொதுமக்களை இவ்வாறு கஷ்டத்துக்கு உள்ளாக்குவது என்ன நியாயம்?

குடந்தை, பாலாஜி.

# "சபாஷ்! வெரிகுட், வெரிகுட்!"

✉ கலைஞரின் மகன் என்பதற்காக மு.க. ஸ்டாலின் மேயராவது குடும்ப அரசியல் அல்ல. ஆனால் கலைஞருக்குப் பிறகு மு.க. ஸ்டாலின் தி.மு.க.வின் தலைவராகவும், தமிழக முதல்வராகவும் வர நேர்ந்தால் அப்போது அது நிச்சயம் 'குடும்ப அரசியல்'தான். அதற்கான வித்துக்கள் இப்போதே இடப்படுகின்றன என்பதுதான் வை.கோ. தரப்பினரின் வாதம். நாஞ்சிலார் விலக்கப்பட்டதும், மறுபடி சேர்த்துக் கொள்ளப்பட்டதும் எதற்கோ நடந்த 'ஒத்திகை' போலத்தான் தோன்றுகிறது.

கோவை, கே. கண்ணன்.

## ரூ. 25 பரிசு பெறும் கடிதம்

✉ ஸ்டாலின் நிறுத்தப்பட்டிருப்பதைக் குறைகூறும் எதிர்க்கட்சிகள் தாங்கள் நிறுத்தி இருக்கும் வேட்பாளர்கள் மேயர் பதவிக்குத் தகுதியானவர் தானா...? என்பதை ஏனோ சீர்தூக்கிப் பார்ப்பது இல்லை. வை.கோ. கட்சி சார்பில் நிறுத்தி இருக்கும் எஸ்.எஸ். சந்திரன் அரசியலையே 'பார்ட் டைமாக' கொண்டவர். அவரை வேட்பாளராக நிறுத்தி மேயர் பதவியையே கேலிக்கூத்தாக்கி உள்ளார் வை.கோ. பொது வேட்பாளராக நிறுத்தப்பட்டிருக்கும் சந்திரலேகா, நிர்வாகத் திறமையால் மேயர் பதவிக்குத் தகுதியானவர் என்று ஒப்புக் கொண்டாலும் நேர்மையான மேயராகத் திகழ்வாரா என்ற சந்தேகத்தை சமீபத்திய அரசியல் மாற்றம் மூலம் ஏற்படுத்தி விட்டார். ஜெ. தாமாகவே ஆதரிக்க முன்வந்தாலும், 'ஆஸிட் அரசியலை' மறந்து இவர் ஏன் ஏற்றுக் கொள்ள வேண்டும். 'தேவையில்லை' என்று சொல்வதுதானே? மேலும் மேயரை இம்முறை மக்கள்தான் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் போகிறார்கள் என்பதால் குடும்ப அரசியலை கலைஞர் வளர்க்கிறார் என்பது அபத்தமானது.

பவித்திரமாணிக்கம், ஆர். பாஸ்கரன்.

✉ "நேருவும் இந்திராகாந்தியும் உயிரோடு இருந்த வரை தங்கள் வாரிசுகளுக்கு எந்தப் பதவியும் அளிக்கவில்லை" என்று குமரிஅனந்தன் சொல்லியிருப்பது தவறாகும். நேரு உயிரோடு இருந்தபோதே இந்திரா, காங்கிரஸ் கட்சித் தலைவராக இருந்தார். அரசு விவகாரங்களில் தலையிடவும் செய்தார். அதே போல சஞ்சய் இறந்ததும் விமான ஓட்டியாக இருந்த ராஜீவை வேலையை ராஜினாமா செய்ய வைத்து, அவரைக் காங்கிரஸ் கட்சித் தலைவராக ஆக்கியது இந்திராதான். அவர் பிரதமரின் பிம்பமாகவே செயல்பட்டார்.

சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

✉ மு.க. முத்து பேட்டியில், தாம் மனம் திருந்தி விட்டதாகவும், அப்பா தன்னை ஏற்றுக் கொள்ள மாட்டாரா? என்றும் கேட்டு உள்ளார். ஒருவேளை அப்பா ஆட்சிக்கு வராமலிருந்தால் இதுபோல் மனம் திருந்தியிருப்பாரா? பங்காரு அடிகளுக்கே வெளிச்சம்!

பாம்பன், செ. சல்மான்.

✉ மீண்டும் தமிழக முதல்வராகி, 5 கோடி தமிழக மக்களின் வாழ்வில் மகிழ்ச்சியைக் கொண்டுவந்த கலைஞர் கருணாநிதி, மனம் திருந்தி துயரத்தில் வாடும் தன் மகனின் வாழ்விலும் மகிழ்ச்சி நிலவச் செய்வதுதானே நியாயம்?

கமுதி, ஜே.வி.ஆர்.

✉ 'சபாஷ்... வெரிகுட், வெரிகுட்...' என சொல்ல வைத்தது 22.9.96 இதழில் வெளியான ஒவ்வொரு ஜோக்கும். மொத்தம் 23 ஜோக்குகளை போட்டு ஒரு 'ஜோக் ஸ்பெஷல்' இதழையே வெளியிட்டு விட்டீரே... தாங்க்ஸ் சார்!

மோகனூர், சக்தி. சரவணன்.

✉ கனடாவில் போய் பாட்டாளி மக்கள் கட்சி நிறுவனர் டாக்டர் ராமதாஸ் இந்திய மக்களை (தமிழ்நாடு மக்களை) தரக்குறைவாக எண்ணிப் பேசியுள்ளார். இவர் ஓட்டு வேட்டையாடவும் வந்து விடுகிறார். இந்த மாதிரி தலைவர்களிடம் மக்கள்தான் கவனமாக இருக்க வேணும்.

சென்னை - 101, நா. பாலசுப்பிரமணியன்.

✉ உலகத் தமிழ் பண்பாட்டு மாநாடு பற்றிய கட்டுரையும் படங்களும் எங்களை கனடாவுக்கே அழைத்துச் சென்றது போல் இருந்தது. அன்றைய நிகழ்ச்சியில் இராமதாஸ் அநாகரிகமாகப் பேசினார் எனக் குறிப்பிட்டு இருந்தீர்கள். அவர் பேசியது அனைத்தும் நடக்கும் உண்மைச் செய்திகள்தான். மாநாட்டில் இதை அவர் பேசியது சாலபொருத்தம்.

கரடி கொல்லப்பட்டி, கே. எம். கவிட் முருகன்.

✉ 'முரசொலி மாறன் கவனத்துக்கு!' - நாட்டின் மீது அக்கறை கொண்டு எழுதப்பட்ட அழகான, அருமையான தலையங்கம். பாராட்டுக்கள்.

தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ இலட்சிய மனிதர் ஸ்தறான் ஹுசைனின் நேர்முகம் இதழுக்கே மகுடம் போன்று அமைந்துள்ளது. அந்த நேர்முகத்தின் கடைசி இரண்டு பதில்களில் வெளியான அவரது வருத்தமும், மனஉறுதியும் பெரிதும் ஈர்க்கின்றன.

வில்லியனூர், இரா. நாகசுந்தரம்.

# கடலோரக் கொலைகள்

10

கதை : பெனிட்டோகுமார்

படம் : சசி

டாக்டர் ஜகந்நாதன் தூங்குகிறவர் போல் மணல் பரப்பில் கிடந்தார்

கிட்ட நெருங்காதே! எட்டப் போ!

பாவம்! கடைசியா பாளையங்கோட்டை அரசு ஆஸ்பத்திரியில் பணியாற்றி ஓய்வு பெற்றார்...

...சொந்த ஊர் உவரிக்குத் திரும்பி, கடைசி காலத்தை நிம்மதியா கழிக்கலாம்னு நினைச்சவருக்கு இப்படியாயிருச்சே!

அப்பா! ஐயோ! அப்பா!

மகன் புலேந்திரன் புலம்பினான்...

திசையன்விளைல நான் பாத்திரக் கடை வைச்சிருக்கிறது வசதியா போச்சுன்னு சொன்னியே! பக்கத்து கிராமம் உவரில செட்டில் ஆயிடறேன்னியே...

ஸாரிப்பா... தைரியமா இரு...

இன்ஸ்பெக்டர் வந்து...








நந்து பண்ணை
வீடு சென்றபோது...

அட, உன்னைப்
பார்க்கத்தான் புறப்பட்டேன்...
என்னமோ மறுபடி கொலை
யாமே? பேசிக்கிறாங்க?

ஆமா, பரமகுரு
செத்த அதே
இடத்துல.
டாக்டர்...
தங்கமானவர்

ஹூம்... இங்க வேலை
முடிஞ்சுது; வேற கிராமத்துக்குப் போய்
ஆராய்ச்சியைத் தொடரலாம்னு
பார்த்தா...

ஊர்ல சவம்
விழுந்திருக்கிறப்ப வேணாம்
ஸார். ரெண்டு நாள்
கழிச்சுப் போங்க.

இதற்கிடையில்...

ஆட்டோப்ஸி ரிப்போர்ட்
வந்துருச்சா, ஸார்?

ம்... கழுத்துல சின்னதா
துணி போட்டு இறுக்கி, மூச்சு
முட்ட வைத்துக்
கொன்னுருக்காங்க...

ரெண்டு கொலைங்
களுக்கும் தொடர்பு இருக்கணும்
ஸார். ரெண்டும் ராத்திரில.... ஒரே
இடத்துல... செத்துப் போன ரெண்டு
பேருக்கும் எதிரின்னு யாருமே
இல்லே...

ஃபோன் ஒலிக்க...

மதிவாணன் ஹியர்...

நாகர்கோயில் எஸ்.ஐ. விக்டர்
தேவராஜ் பேசறேன். ஹிந்து
காலேஜ்ல விசாரிச்சேன். நாகராஜ்
என்ற பேரிலே லெக்சரர், புரொபசர்
யாரும் கிடையாது!

(தொடரும்)



''சாகப் போற காலத்துல ஏன் தாத்தா பஞ்சாயத்துத் தேர்தல்ல போட்டியிடுறீங்க...?''

''இளவட்டமா இருக்குறப்பவே பஞ்சாயத்துத் தேர்தல்ல போட்டியிடணும்னு ஆசைப் பட்டேன். என்ன பண்றது, என் போதாத நேரம் நான் கிழவனா போனதுக்கப்புறம் இந்தத் தேர்தல் வந்திருக்குது!''

– ஜி. செல்லத்துரை



'' 'இரவில் விபச்சாரி'ன்னு நம்ம படத்துக்கு பேர் வச்சதை சென்சார் ஒத்துக்கலை!''

''அப்புறம்?''

'' 'பகலெல்லாம் பத்தினி'ன்னு மாத்தி வைச்சேன்... ஓ.கே.ன்னுட்டாங்க!''

– எஸ். பொன்னுசாமி



''ஏம்பா, ராப்பிச்சை உன் கையில இருக்கிற பாத்திரம் எவர்சில்வரா? அலுமினியமா?''

''ஏன் கேட்கிறீங்க?''

''எப்போதும் பாத்திரம் அறிந்துதான் பிச்சை போடுவேன்!''

– பொறையாறு கானா. கணேசன்

# வித்தகர் :

## பி.எஸ். ரங்கநாதன் (கடுகு)

''கட்டுரைகள் எழுதும்போதே அங்கங்கே நகைச்சுவை தலைகாட்டுகிறது... நகைச்சுவையாகவே எழுதுங்களேன்'' என்று ஸ்ரீவேணுகோபாலன் தூண்ட, மற்றவர் மனம் புண்படாமலும், அதே சமயம் சம்பந்தப் பட்டவரே ரசித்து மகிழும்படியும் 'தாளிக்க'த் தொடங்கினார் 'கடுகு'.

'கடுகு' தவிர 'அகஸ்தியன்', '141' என்று தொடங்கி, ஒரு டஜன் பெயர்களில் எழுத்தைக் காதலிக்கிறார் பி.எஸ். ரங்கநாதன். இந்த செங்கல்பட்டுக்காரரின் கொடி இப்போது டெல்லியில் பறக்கிறது.

ஹிந்துஸ்தான் தாம்ஸன் விளம்பர நிறுவனத்தில் 'க்ரியேட்டிவ்' துறையில் அடியெடுத்து வைத்தபோது வயது ஐம்பது. அங்கே 'ஹௌஸ் ஜர்னல்' ஒன்றில் புகுந்து கொண்டு தலைமுதல் வால் வரை எல்லோருடைய 'வயிற்றெரிச்சலை'யும் கொட்டிக் கொண்ட பெருமை உண்டு.

''அங்கே வேலை பார்த்த அவ்வளவு பேருமே நல்ல காரெக்டர்கள்' என்கிறார் 'கடுகு.'

1969 ஆம் ஆண்டு மாடல் கார் ஒன்றைப் போட்டு, ஒரு வேடிக்கை விளம்பரம். 'மிகவும் பிரமாதமான அசையாச் சொத்து' என்கிற வாசகத்தைத் தவிர, பிழைதிருத்தம் என்கிற மாதிரி '1869' என்று படிக்கவும் என்கிற குறிப்பு வேறே. 'நான் லட்சாதிபதியாகப் பணம் சம்பாதிக்க இந்தக் கார்தான் உதவியது' என்று கொசுறுச் செய்தியாக மெக்கானிக் விளம்பரம் பக்கத்திலேயே. இப்படியெல்லாம் இவர் ஹௌஸ் ஜர்னலில் விளையாடியபோது, 'என்னை எழுதப் போகிறாயா?' என்று மிரட்டுவார்களாம். அதன் பொருள் 'என்னைப் பற்றியும் எழுதேன்' என்பதுதான்.

'அகஸ்தியன்' என்பது அமரர் கல்கியின் புனைபெயர்களுள் ஒன்று. அதையே தாமும் சூட்டிக் கொண்டு கமலா, அங்கச்சி, தொச்சு என்று பாத்திரங்களைப் படைத்து, நகைச்சுவை சொட்டச் சொட்ட எழுபது சிறுகதைகளுக்கு மேல் எழுதியுள்ளார்!

''இந்த மாதிரி எழுதுவதற்கு முன்னோடியாக அமைந்தவர் அமரர் தேவன்தான்'' என்கிறார் பி.எஸ்.ஆர்.

சின்னச் சின்னத் தகவல் துணுக்குகளாய் எழுதியபோது சூட்டிக் கொண்ட பெயர் கடுகு.

# ‘கடுகு’ முதல் கம்ப்யூட்டர் வரை!



ஒரு சமயம் தம்முடைய வீட்டில் கதவிலக்க மான ‘141’ஐக் கூடப் புனைப்பெயராக்கிக் கொண்டவர்!

**க**டுகில் தொடங்கிய சாதனை இப்போது கணிப் பொறியில் மையம் கொண்டிருக்கிறது. குறிப்பாகத் தமிழில் இவரே வடிவமைத்துத் தரும் எழுத்து வடிவங்கள் (FOUNTS) கல்கி, விகடன் உட்படப் பல பத்திரிகைகளில் பயன் படுத்தப்படுகின்றன என்பது ஒரு புதிய செய்தி. (இந்தக் கட்டுரையின் தலைப்பு கூட அவர் உரு வாக்கித் தந்த எழுத்து வடிவம்தான்!)

“இனிமேல் எல்லோருமே ‘டைப்ரைட்டிங்’ மாதிரி கணிப்பொறியைக் கற்றால்தான் உண்டு” என்கிற பி.எஸ்.ஆர். பைசா செலவில் லாமல், அதுவும் அறுபது வயதுக்குப் பிறகு தாமே சொந்த முயற்சியால் கற்றுக் கொண் டவர். இப்போது இந்த மாயவித்தைக் கருவியில் இவரால் முடியாததே இல்லை என்கிற நிலையை எட்டியிருக்கிறார்.

பத்து நாள் முழு மூச்சாக ஈடுபட்டால் ஓர் அற்புதமான ‘த்ரீ.டி’ படம் உருவாகி விடுகிறது. மிகவும் நுட்பமான இந்த வகை த்ரீ.டி. படங் களைச் சில ஆண்டுகள் முன்னால் ஆனந்த விகடன் வார இதழ், அட்டையில் வெளியிட் டது நினைவிருக்கும். ஆனால் இந்தப் படத் தைப் பார்த்துப் புரிந்து கொண்டு பிரமித்து நிற்க ஒருவிதமான திறமை வேண்டும்.

மகளுடன் அமெரிக்கா சென்றிருந்த போது, அங்கு எமரி பல்கலைக் கழகத்தில் கொட்டிக் கிடக்கும் கம்ப்யூட்டர்கள், எட்டுத்தள நூலகம், அதிலும் ஆயிரத்து எண்ணூறு நகைச்சுவைப் புத்தகங்கள் என்று புகுந்து தம்முடைய அறிவை விசாலப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

சிறுகதைகள் தவிர, ஸீரியஸ் முறையில் சில முயற்சிகளும் உண்டு. அவற்றில் குறிப்பிட வேண்டியது ‘அலைபாயுதே கண்ணா’ என்ற நாவல்.

**ந**கைச்சுவை உணர்வு இருந்தால் அவர் களிடம் மனிதாபிமானம், தவிர அனைத்து உயிர்களிடமும் அன்பு மிகுந்துதான் இருக்கும். அந்த வகையில் ‘கடுகு’ ஒரு பிராணி நேசர். ஒரு சமயம் சென்னை வந்திருந்த போது எங் கிருந்தோ தவறி விழுந்த கொட்டைப் பாக்கு அளவுள்ள அணில் குஞ்சு இவர் கையில் கிடைத்தது. உடனே அதை மைப் புட்டி வரும் அட்டைப் பெட்டியில் வைத்து விமானத்தில் புதுதில்லி கொண்டு சென்றது முக்கியமான நிகழ்ச்சி. தாயன்போடு ஐந்து மாதங்கள் வளர்ந்த பிறகும் அந்த அணிலின் சுதந்திர வேட்கையே வெற்றி பெற்றது.

இவரே அந்த அணிலை, கான்மடன் பக்க மிருந்த ஒரு மரத்தடியில் கொண்டு போய் விட்டு விட்டார்.

இடைக்காலத்தில் இவருக்கு உற்றதுணை, தோழன் எல்லாம் அதுதான்! ஜோல்னாப் பையில் வாசம். தோளில், அலுவலக மேஜை யில் என்று சர்வ சுதந்திரம். அதற்கு ஒரு பெயர் கூட வைத்திருந்தார். ‘பிட்டு’ என்று.

- சுப்ர.பாலன்

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# கல்கி – அனுபவ் குரூப்

இணைந்து வழங்கும்

# கவிதைப் போட்டி

**பரிசு ரூ. 21,000/-**

**பொருள் : சுற்றுச்சூழல் பாதுகாப்பு**



'சுற்றுச்சூழல் பாதுகாப்பை'க் கருப் பொருளாகக் கொண்டு எழுதப்படும் கவிதைகள், போட்டிக்கு வரவேற்கப்படுகின்றன.

மரபு – புதுக்கவிதைப் பாகுபாடில்லை. ஒருவரே எத்தனை கவிதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். கல்கியில் ஒரு பக்கத்துக்கு மிகாமல் அமைய வேண்டும் என்பதுதான் ஒரே கண்டிஷன்.

**முதல் பரிசு - ரூ. 10,000; இரண்டாம் பரிசு - ரூ. 5,000; மூன்றாம் பரிசு - ரூ. 3,000**
தவிர, மூன்று கவிதைகள் ஆறுதல் பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஒவ்வொன்றும் ரூ. 1000 பரிசு பெறும்.

நடுவர் குழு, பரிசுக்கான கவிதைகளைத் தேர்ந்தெடுக்கும். கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

**போட்டிக்கான கவிதைகள் வந்து சேரக் கடைசி தேதி: அக்டோபர் 17.**
உறையின் மீது 'கல்கி – அனுபவ் கவிதைப் போட்டி' எனக் குறிப்பிடுதல் அவசியம்.
போட்டி முடிவுகளும் முதல் பரிசுக் கவிதையும் கல்கி தீபாவளிச் சிறப்பிதழில் வெளிவரும்.
வாசகர்கள் பெருமளவில், உற்சாகத்துடன் கலந்து கொண்டு போட்டியைச் சிறப்பிக்கத் தயாராகலாம்!
*ஆல் தி பெஸ்ட்!*

# பொன் விளையும் பூமி

## கூடுவாஞ்சேரி:

**அவ்வை நகர் (1121/95)**

**ராஜாஜி நகர் (532/95)**

**திருக்குறள் நகர் பகுதி I (1057/95)**



ஃபோர்டு கார்
தொழிற்சாலை அருகே

வேகமாக வளர்ச்சியடைந்து வரும் கூடுவாஞ்சேரியில் . மதிப்பு வாய்ந்த வீட்டு மனைகளை உங்களுக்கு வழங்குகிறது டிஎல்வி. இந்நிறுவனம், இருபது ஆண்டுகளுக்கு மேலாக பல்வேறு துறைகளில் தன் பெயரை நிலை நாட்டியுள்ளது.

மனைகளுக்கான பணம் செலுத்தும் போது வியப்பூட்டும் தள்ளுபடிகள் மற்றும் தங்கப் பரிசுகள் பெறலாம்.

15 தினங்களுக்குள் முழுத் தொகை - 11% தள்ளுபடி + 3 கிராம் தங்கக்காசு.

30 தினங்களுக்குள் முழுத்தொகை - 10% தள்ளுபடி + 2 கிராம் தங்கக்காசு

60 தினங்களுக்குள் முழுத்தொகை - 5% தள்ளுபடி + 1 கிராம் தங்கக்காசு

இலவசம். மனைக்கு செல்ல வாகன வசதி - காலை 6, 11 மணி. மாலை 3 மணி.

*மேற்கொண்டு விபரமறிய எங்களை அணுகவும் :*




**டிஎல்வி ஹவுஸிங் & ஃபைனான்ஸ் (பி) லிமிடெட்,**

54, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, புவனேஸ்வரி தியேட்டர் எதிரில், சென்னை - 600 007.
போன்: 5325311/12/13 ஃபேக்ஸ் : 5325363

***20 ஆண்டுகளுக்கு மேலாக நன்மதிப்பை கட்டிக்காப்பவர்கள்***

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka

புதிய




நவீன விஞ்ஞான முறையில் சுத்திகரிக்கப்பட்டது

## போஷாக்கூட்டும் சமையல் எண்ணெய்



தாய்ப் பாலுக்கு சமமானது என நிரூபிக்கப்பட்ட கே.கே. ஆர் பாமாயில் தனித்தன்மை வாய்ந்தது. இது சமையல் எண்ணெய்களிலிருந்து பல வகையில் மாறுபட்டது. பாமாயில் பாம் பழத்திலிருந்து பிழிந்தெடுக்கப்படுகிறது.

வைட்டமின் A & E இரண்டையும் மிக அதிக அளவில் கொண்டுள்ளதால் உயிரணுக்கள் சேதம் அடையாமல் பாதுகாத்து உடல் நலம் சீராக இருக்க உதவுகிறது. மாரடைப்பு, புற்றுநோய் மற்றும் நுரையீரல் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்படக்கூடிய அபாயத்தை குறைக்க வல்லது என்று நிரூபிக்கப்பட்டுள்ளது.




கே.கே.ஆர்
பாமாயில்
வெண்டிங் நிலையத்தில்
ரூ.28.50 (1 லிட்.)
பாக்கெட்
ரூ.32.00 (1 லிட்.)

சென்னையிலும் அதன் புறநகர் பகுதிகளில் மட்டும் கிடைக்கிறது

* கே. கே. ஆரின் செம் பனை பண்ணையில் இரண்டு யூனிட் (10 சென்ட் ஒரு யூனிட்) வாங்குபவருக்கு, ஒரு வருடத்திற்கு மாதந்தோறும் ஒரு லிட்டர் கே.கே. ஆர் பாமாயில் இலவசமாக வழங்கப்படும்.




KKR
பாமாயில் (இந்தியா) லிட்.,

NO. 121, மாதவரம் நெடுஞ்சாலை (வடக்கு), பெரம்பூர், சென்னை 600 011, Ph: 5375456, 5376796.

ADEPT/KKR/96

**கே.கே.ஆர் பாமாயில், தூய்மை மற்றும் முழு குடும்பத்தின் ஆரோக்கியம்**